

ஆனந்தபோதினி கம்போஸிங் டிபார்ட்மெண்டு.

உ

ஓம்

பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.



தொகுதி 14 } சுக்கிலஹு ஆனிமீ கஉ { பகுதி 12
1929ஹு ஜூன்மீ 14உ

## கடவுள் வணக்கம்.

தெருளாகி மருளாகி யுழலுமன மாய்மனஞ்
சேர்ந்துவளர் சித்தாகியச்
சித்தெல்லாம் சூழ்ந்தசிவ சித்தாய் விசித்ரமாய்
திரமாகி நாநாவிதப்
பொருளாகி யப்பொருளை யறிபொறியு மாகியைம்
புலனுமா யைம்பூதமாய்ப்
புறமுமா யகமுமாய்த் தூரஞ் சமீபமாய்ப்
போக்கொடு வரத்துமாகி
இருளாகி யொளியாகி நன்மை தீமையுமாகி
யின்றாகி நாளையாகி
என்றுமா யொன்றுமாய்ப் பலவுமா யாவுமா
யிவையல்ல வாயநின்னை
அருளாகி நின்றவர்க ளறிவதல் லாலொருவ
ரறிவதற் கெளிதாகுமோ
அண்டபகி ரண்டமு மடங்கவொரு நிறைவாகி
யானந்த மானபரமே. (1)

---

இடமொரு மடவா ளுலகனைத் தீந்திட்
டெவ்வுல கத்தையுமீன்றும்
தடமுறு மகில மடங்குநா ளம்மை
தன்னையு மொழித்து விண்ணெனவே
படருறு ஜோதிக் கருணையங் கடலே
பாயிருட் படுகரிற் கிடக்கக்
கடவனோ நினைப்பு மறப்பெனுந் திரையைக்
கவர்ந்தெனை வளர்ப்பதுன் கடனே. (2)

---

பிடித்ததையே தாபிக்கும் போரா ணவத்தை
யடித்துத் துரத்தவல்லா ரார்காண் பராபரமே. (3)

# அரும்பொருள் விளக்கம்

(இ—ள்) தெளிவாய், மயக்கமாய (இவைகளில்) உழலும் மனமாய் மனங்கூடிய அறிவாய், அவ்வறிவு சூழ்ந்த சிவஞானமாய் ஆச்சர்யமாய், உறுதியாய், பலவிதமான பொருள்களாய், அவற்றை அறியும் ஐம்பொறிக ளாய், ஐம்புலன்களாய், ஐம்பூதங்களாய் வெளியாய், உள்ளாய், தூரமாய்க் கிட்டமாய், போக்காய், வரவாய், இருளாய், ஒளியாய், நன்மையாய், தீமை யாய், இன்றாய், நாளையாய், என்றுமாய், ஒன்றாய், பலவாய், எல்லாமாய், இவைகள் யாவும் அல்லாதாய் உள்ள நின்னை (தாமே) அருளாகி அந்நிலையில் நிற்பவரல்லாது வேறு யாரால் எளிதாக அறிய முடியும். அண்டாண்ட பகிரண்டங்கள் யாவும் தன்னுள்ளடக்கி எங்கும் ஒரே நிறைவாகி யுள்ள ஆனந்தமயமான பரமேஸ்வரனே என பாட்டின் பொழிப்பு.

இப்பாடல் ஈசனது ஸர்வ வியாபகத் தன்மையைக் காட்டுகின்றது. ஈசன் யாவுமானவன், தெளிந்த அறிவும், அவ்வறிவற்ற மயக்கமும் ஈசனே தான். இம்முரண்பாடுகளுள் ஈசனகப்படான். இவைகள் யாவுமான ஈசனே இவைகளல்லாதாயும் நிற்பான். அத்தகைய ஈசனை அருளாகி யது வாயிருக்கும் அறிஞரே யறிவர் என்பது இதன் செறிந்த கருத்து. நம் கண் முன் தோன்றும் எல்லாப் பொருள்களும் எவ்வளவு முரண்பட்ட தாயினும் மாயை மூலம் நமக்கவ்வாறு தோன்றுகின்றதே யன்றி உண்மை யில் அவைகள் யாவும் ஈசனே யாகும். ஈசன் இவைகளெல்லாமாய் வெளிக் குத் தோன்றினும் இவைகளைப் போன்று மாறுதலுறுது மாறுதலற்ற நிலையில் தனிப்பட்ட செம்பொருளாதலின் 'யிவை யல்லவாய நின்னை' என்றார். இதனை அறியக்கூடியவர் இவ்வுலகம் பொய்த் தோற்றத்தை நீக்கி மெய்த் தோற்றமாம் அருட் தோற்றம் பெற்றாலொழியக் காண முடி யாதென்பார். 'அருளாகி—எளிதாகுமோ' என்றார்.

2. இதில் ஈசனது அழியாத தன்மையைக் கூறுகின்றார்.

இடப் பாகத்தை உமைக்குக் கொடுத்து, அவள் பற்பல அண்டங் களைச் சிருட்டிக்க, அவைகளை அழித்தடக்கும் காலையை அம்மையும் தன் னுள்ளடங்க பரந்தபேரொளியா யிருக்கும் காருண்யக் கடலாகிய ஈசன் இருண்ட பிறவிக் கடலிற்கிடத்தலை, அதற்குக் காரணமான நினைப்பு மறப்பு மாயைத் திரையை ஒழித்து நீக்கி அருள் செய்யவேண்டும் எனக் கேட்கின் றார். பிறவியின் காரணமும், அதை ஒழிக்கும் வகையும், ஒழிக்க வல்லவன் யாவனென்றும், அவனது தன்மையும் இப்பாடலுள் நன்கு கூறப்பட் டுள்ளன.

மடவாள்—இளையள், பாயிருட்—படரும் இருள், படுகர்—பிறவிக்கடல்.

3. மோட்ச சாம்ப்ராஜ்யத்திற்குத் 'தான்' அழிதல் வேண்டுகின்றார்.




## கடவுள் உண்டா?

கடவுள் உண்டா?—இக்கேள்வி இன்று நேற்றுப் பிறந்ததல்ல. உலகம் தோன்றிய நாள்முதல், அதாவது, உலகில் மனிதன் தோன்றிய காலமுதல், அவ்வக்காலத்து மனிதர்கள் அவரவர்கள் தகுதிக்கேற்ப ஒவ்வொரு வகையாகத் தங்களுக்கும் பெரிதான வலிமை, அழகு, காம்பீர்யம், வீரம் முதலிய எதிலேனும் தம்மைவிட உயர்ந்த ஒன்றைக் கடவுள் என வணங்கி வந்துள்ளனர். மனித இயற்கை எப்போதும் தனக்கு மேலான ஒரு சக்தியில் மரியாதை வைத்தே வந்திருக்கின்றது. கால சக்ரச் சுழற்சியால் இவ்வெண்ணமும் சுழன்று சுழன்று மாறுபட்டுக் கொண்டே வருகிறதாயினும் இவ்வெண்ணத்தின் முக்யாம்சமாகிய கடவுட் கொள்கை உலகத்தில் பெரும்பான்மையான மக்களிடை ஒரு மாதிரியாகவே இருந்து வந்துள்ளது. மிகமிகப் பழங்காலத்தில் மக்கள் இறந்த ஆவிகளையும், இயற்கையில் பேராற்றலுடைய மலை, நதி, வானம், கடல், முதலியவற்றின் காம்பீர்யத்தையும், அச்சமும் ஆர்வமும் விளைக்கும் விலங்குகளையும், லிங்கத்தையும், நாகரிகமறியாத பல கோரமான உருவங்களையும், ஊனுணவும், உயிர்ப்பலியும், கள்ளுங்கொண்டு பூசித்து வந்தனர். பிறகு அறிவு முதிர முதிரக் கட்டுக்கடங்காது பற்றற்றுப் பரந்துள்ள தானே தானாய்த் தனித்து நிற்கும் ஓர் தனிப்பொருளுண்டென்று கண்டு, தத்துவ வழியில் அருவம், அகண்டம், நிர்மலம், நிஷ்களம், நிரஞ்சனம், ஆதி, அனாதி, நித்யம் என்ற இத்தொடக்கத்துப் பெயர்களால் அதனைப் போற்றிப் புகழ்ந்தனர். மதாசாரியர்கள், கவிகள், ஞானியர் என்போர் கடவுளைக் கருணா சமுத்திரமாய்க் கவினுறு காட்சியாய்த் தாயாய்த் தந்தையாய்த் தனயனாய்த் தகைசான்ற காதலனாய்க் காதலியாய்க் கண்டு வாழ்த்தினர். விஞ்ஞானப் புலவர்கள் (Scientists) இதனையே பரமாணுக் கூட்டம் (Elemental-atoms), ஆகாச நிறைவு (Ether), அண்டாண்ட சக்தி முதலிய பெயர்களாற் கூறிக் கடைசியாக 'எமக்குத் தெரியாத உண்மை' என

முடிவு கட்டியுள்ளனர். இவ்விதமாக மனிதன் எக்காலத்தவனாயினும், எந்நிலையிலிருப்பினும் எப்போதோ ஒரு முறையேனும் இக்கேள்வி அவனுக்குள் எழாது போவதில்லை. அதிலும் 'மதமே உயிர், கடவுளறிவே வாழ்வின் லட்சியம்' என்றுள்ள நமது புனிதப் பெரும் பாரத நாட்டில் இக்கேள்வியைப்போல் வேறு எக் கேள்வியும் அவ்வளவு தூரம் ஆராய்ச்சி செய்யப் பெறவில்லை. அதுமட்டுமன்றி இப்பழமை மிக்க இந்தியாவிற்றான் 'இவ்விஷயத்தை அறிவால் ஆராய்வது மட்டும் போதாது, அனுபவித்தே தீரவேண்டும்' என மனிதன் முதல் முதல் துணிந்து கண்டு களித்து அனுபவித்து மகிழ்ந்ததுமாகும். இவ்வுயரிய பெரு நிலைக்காகத் தம்முடைய வாழ்க்கைச் சுகங்களை யெல்லாம், செல்வம், கீர்த்தி, முதலிய யாவையையும் பரவுணர்ச்சிக்காக விட்டுச் சென்ற பெருந்துணிகரமான துறவிகள் நம் நாட்டிலேயே தோன்றினர். உலகத்திற்கு முதல்முதல் 'ஏகம் சத்' (ஒன்றே உள்ளது) என்று பறை சாற்றியதும் நம் நாடேயாகும்.

ஆனால் இவ்வளவு தூரம் தெய்வ உணர்ச்சியின் உச்சியிலிருந்த நம் நாட்டில், அதுவும் நமது தென்தேசத்தில் இப்போது கடவுள் உண்டா? இல்லையா? என்ற கேள்வி கேட்கப்படுகின்றது. நம் நாட்டில் இதுவரை 'என் தெய்வ முன் தெய்வ மென்றெங்குந் தொடர்ந்தெதிர் வழக்கு'ப் போர்கள் பலரிடை நிகழ்வது குறித்து வருந்தி வந்தோம். ஆனால் இப்போதோ கடவுளே இல்லையென்றுங் கூடச் சிலர் சொல்ல முன் வந்துவிட்டனர். இவ்விஷயத்தில் மூன்று கட்சிகள் உண்டு. ஒன்று ஆஸ்திகர் கூட்டம், அதாவது கடவுள் உண்டு என்னும் கூட்டத்தார். மற்றொன்று நாஸ்திகர் கூட்டம், அஃதாவது கடவுள் இல்லை யென்போர். மூன்றாவதாக 'கவலையில்லை' (Agnostic) என்னும் நடுத்தரமான 'கடவுளிருந்தாலும் இல்லாவிடினும் எங்களுக்குக் கவலையில்லை. ஒருவரும் அதைப்பற்றிக் கவலைப்பட வேண்டிய அவசியமுமில்லை' என்போர். இப்போது இம்மூன்று கட்சியார்களின் கொள்கைகளையும் ஒருவாறு சிறிது ஆராய்வோமாக.

இயற்கையை ஒருமுறை மேலெழுந்த வாரியாக உற்று நோக்குவார்க்கும் கூட அது பல குருட்டுச் சக்திகளின் பொருளற்ற சேர்க்கையல்ல என்பது நன்கு விளங்கும். அந்தரத்தில் ஆகாசத்தில் அண்டங்கள், சூரிய சந்திராதிகள், தாங்குவாரற்றுத் தாமே உருளுவது எக்காரணம் பற்றி? அதனை விஞ்ஞானப் புலவர் இழுக்கும் சக்தியால் (Gravitation) எனக் கூறுவர்? இச்சக்தியாவது என்னை? இயற்கைச் சட்டங்களுள் ஒன்றாகும். இயற்கை தனது பரிணாமத்தில் தனது சட்ட திட்டங்களுக்குக் கட்டுப்பட்டே அமைதியாய், காரண காரிய சங்கிலித் தொடர்போடு தங்கு தடையின்றி ஒரே மாதிரியாக விகசித்துக்கொண்டே போகிறது. எப்போதும் மாறிக் கொண்டிருக்கும் உலகில் மாறாதது ஒன்றுண்டு. அதுதான் மாறுதற் சட்டம் (The Law of Evolution). இவ்வாறு நேர்மையான வகையில் உலகம்

நடப்பதைக் காணும் எவனே கடவுள் இல்லை என்று சொல்லத் துணிவன்? அறிவின்றி ஓர் வரம்பும், ஒழுங்கு முண்டோ? இல்லையே? அவ்வாறாக இவ்வுலகம் ஜடப் பொருள்கள் தம்முட்டாமே எப்படியோ கூடிச் சேர்ந்து வந்ததெனின், அச்சேர்க்கைக் குரிய அறிவு ஜடப் பொருள்களுக்கு ஏது? இருப்பதெனின் அவைகளுக்கு அளவுணர்ச்சி யுண்டா? உதாரணமாகத் தண்ணீரை எடுத்துக் கொண்டால் அது உயிர்வாய்வு (Oxygen) ஒரு பங்கும், நீர்வாயு (Hydrogen) இரு பங்கும் கலந்ததாகும். இவ்வாயுக்களுக்கு இவ்வளவில் கூடினால் மட்டுமே நீருண்டாகு மென்ற அறிவு யார் கொடுத்தது? ஆகவே இச் சடப் பொருள்கள் யாவையினூடும் அழியாத அறிவொன்றுண்டு. எல்லாம் இவ்வறிவே யாகும். இதனாலேயே உலகம் இயங்குகின்றது என்றல்லாது வேறு எவ்வகையிலும் பதில் கூறமுடியாது. இவ்வெங்கும் நிறைந்து எல்லாமா யிருக்கும் இவ்வறிவினையே பெரியோர் கடவுள் எனப் போற்றினர். 'அறிவி லறிவி லறிவி லறிவி லறிவி லறிவென் றறி' என ஒரு பெரியார் கூறுகின்றார். மற்றும் இயற்கை முழுவதும் உயிரும், உணர்வும் பிலிற்றுகின்றன என நம் நாட்டுப்பேரறிஞர் ஜகதீஸ் சந்த்ரவசு அவர்கள் மெய்ப்படுத்தி யுள்ளபடி எங்கும் நிறைந்த உணர்வையும், உயிரையுமே நாம் கடவுள் என்கின்றோம்! ஆகவே உலகத்தின் தோற்றங்க ளெல்லாம், ஆட்டங்களெல்லாம் இவ்வுயிர் வுணர் வறிவாகிய ஒரு பெரும் தனிச் செம்பொருளாலேயே நடைபெறுகின்றன. இது குறித்தே ஆங்கிலத் தத்துவத் தந்தையாகிய பேகனர் (Lord Bacon) 'டால்மட், கொரான், கதைக் கொத்துகள் முதலியவைகளிலுள்ள பொய்க் கதைகளையும் கூட நம்பி விடுவேன், ஆனல் இவ்வகண்டாகார உலகங்களினமைப்பு ஓர் அறிவின்றி வந்துள்ள தென்பதை நம்ப முடியாது. நாஸ்திகர்களை மாற்றுவதற்காகக் கடவுள் அதிசயங்கள் செய்யவில்லை, அவருடைய சாதாரண உலகங்களினமைப்பே அவரது இருப்பை நமக்குச் சுசுப்பிக்கப் போதும்' எனக் கூறினர் போலும். கடவுளினிருப்பை உறுதிப்படுத்துதற்கு நாம் அதிக தூரம் போக வேண்டுவதில்லை. உலகத்தின் இருப்பே கடவுளிருப்பிற்குப் பெரும் அத்தாட்சியாகும். சூனியத்தினின்றும் சூனியத்தைத் தவிர வேறொன்றும் தோன்ற முடியாது. எல்லாவற்றிற்கும், எதுவானலும் காரணம் ஒன்று வேண்டும். காரிய காரணச் சட்டம் அழிக்க முடியாத சட்டமாகும். அச்சட்டத்திற்கு உட்பட்டதே இவ்வண்டபிண்ட சராசரங்களுமாகும். இச்சட்டத்தின்படி இவ்வுலகமாகிய காரியம் இறைவனாகிய காரணத்தினின்றே வந்திருக்க வேண்டும் என்பதே சாலும். ஆனல் நாஸ்திகர்கள் 'அப்படியாயின் கடவுள் எக்காரணத்தினின்றும் உதித்த காரிய மென்பர்'. அவர்களுக்கு நாம்கூறும் ஓரே யொருவிடை காரண காரிய நிகழ்ச்சிகளுக்கும் ஒரு முடிவுண்டு என்பதேதான். மாறுதலுடன் கூடிய பொருள்களெவையும் பரிபூரணமான உண்மைகளாகா. என்

றும் மாறுபாடுறாத நிலைபேறுடைய நித்ய வஸ்துவே கடவுள் எனப் பெறும். மாறுபாடுறாத பொருளிற்குக் காரணம் வேறொன்றும் இருக்கமுடியாது. அதாவது காரியத்திற்கு ஓர் காரணமுண்டு என்ற பொழுதே அக்காரியம் மாறுபாடுடையதாகும். மாறுபாடுறாத ஒன்று காரிய காரணத் தொடர்பில் கட்டுப்பட்டு நிற்காது. எவ்வாறெனில் எக்காலமும் உள்ள ஒன்று எக்காலத் துண்டாக்கப் பெறும்? எங்கும் நிறைந்த ஒன்று எவ்வாறு வேறொரு பொருளால் சிருட்டிக்கப்படும்? அப்படிப் படுமாயின் எக்காலமும் என்பதற்கு முன்பு ஒரு காலமும், எங்கும் என்பதுளகப்படாத ஒரு இடமும் இருக்கவேண்டும். ஆகவே அகண்ட உண்மைக்கு ஆதியொன்று மிருக்க முடியாது. அது அநாதியே யாகும். அவர்கள் கேட்கலாம் 'அம்மூலப்பொருளாகக் கடவுளுக்குப் பதில் இயற்கையையே கொண்டுவிட்டால் என்ன' என. அது சரிதான். இயற்கை முழுவதையும் நாமும் தான் கடவுளெனக் சொல்லுகின்றோம். ஆனால் அடிக்கடி மாறிக்கொண்டு வரும் இயற்கை யிறைவனன்று; உள்ளே மாறாது மாற்றத்தை உண்டாக்கும் மதியே-இயற்கையின் உயிரே-கடவுளாகும். மாறும் பொருள்கள் உண்மைப் பொருள்களாகா; மாறாத ஒன்றே உண்மை யாகும்; இயற்கை மாறுந்தன்மையது என்பதை அறியாதார் யார்? ஆகவே எல்லாச் சக்திகளும், எல்லா உலகங்களும், எல்லா ஜோதிகளும், எல்லா இன்பங்களும், எல்லா உணர்ச்சிகளும், எல்லா அறிவுகளும், பொதுவாக எல்லா ஜீவன்களும் அவனிற்றோன்றி, அவனில் வாழ்ந்து, அவனில் அழியும் தகைமை யானவையே யாம். 'அவனன்றி யோரணுவும் அசையாது' என்னும் தாயுமானப் பெருந்தகையின் வாக்கு உண்மையே யாகும்.

மேற்கூறியவாறு ஒருவாறு விடாமல் நாஸ்திகருடைய பொய்யறிவைப் பொய்யாக்கி விட்டோமாயின் உடனே கடவுள் இருப்பு உறுதியாக்கப்பட்டுள்ள தென்பதற்கில்லை. நடுவே 'கவலையில்லை' யென்னும் இப்பந்தி ஆசாமிகளின் வாதங்கள் குறுக்கிடும். அவைகளின் சாரத்தைக் கீழே தந்து அவற்றின் விஷயத்தை ஆராய்வோமாக. 'நமது அறிவு கட்டுப்பாட்டுள் அடங்கியது. அது ஒன்றுக்கொன்று தொடர்புடைய பொருள்களையே ஆராய்ந்தறிய முடியும். கடவுள் என்பது தொடர்பற்ற பொருள் என நீங்களே ஒப்புக்கொள்ளுகின்றீர். அப்படியாயின் அதனை அறிவால் ஆராய்வதென்னமோ முடியாத காரியம். அது மனித அறிவின் இயற்கைக்கே விரோதம். ஆகவே அதைப்பற்றி கவலையுறுவது அநாவசியம் எனக்கூறுவர். உண்மையே கடவுள் 'வாக்கினால் மனத்தால் மற்றைவகுக்கொணா அறிவினாலும் தாக்கொணாத் தலைவன்.' ஆனால் கடவுளை உள்ளபடி அறிந்துகொள்ள இயலாதே ஒழிய அவரைப் பாவனையால் நினைத்துப் போற்றமுடியும். இதைப்பற்றியேதான் ரால்ப் கட்வொர்த் (Ralph Cudworth) என்பார் தமது 'அறிக்கமுடி

யாத நித்யமான நீதிநெறி' (Eternal and Immutable Morality) என்னும் தமது நூலுள் 'கடவுளை நம்முடைய கட்டுப்பட்டுக் குறுகிய அறிவால் பூரணமாகத் தெரிந்துகொள்ள முடியவில்லை யென்பதால், அவ்வறிவு கடவுளைப் பாவிக்கவுங்கூட முடியாதென்பது உறுதி செய்யப் பெறவில்லை.——உண்மையில் நம்மை நாமே சரியாய்த் தெரிந்து கொள்ளமுடியாது. ஒரு பொருளின் சாரமான உண்மைத் தன்மையைப் பற்றி அதனைச் சரியான வகையில் அடக்கி அனுபவிக்கும் வண்ணம் அறிந்துகொள்ள முடிவதில்லை.—— நாஸ்திகர்கள் தங்களுக்குத் தங்கள் கையால் தொட முடியுமாகையால் பரிபூரணமாகத் தெரிந்ததாகவும், இவ்வுலகத்திலேயே அதைத் (ஜடப்பொருள்) தவிர வேறொன்றுமில்லை யென்றும் கொள்ளும் உடலைப்பற்றிக்கூட ஆழ்ந்து சிந்தித்துப் பார்ப்போமாயின் ஒரு முடிவான எண்ணத்திற்கு வரமுடியாது'—உண்மையில் நம்மைப்பற்றியே நமக்குத் தெரிவதில்லை. நாம் யார்? உடலா? மனமா? அறிவா? உயிரா? அதுவே நமக்குத் தெரியாது. ஆனால் நம்மிருப்பைப் பற்றி நாமே சந்தேகப்படுகின்றோமா? இல்லையே. அதுபோன்றேதான் கடவுளிருப்பும். 'ஒன்றுக்கொன்று தொடர்புடைய பொருள்களைமட்டுமே ஆராயக்கூடிய மனது தொடர்பற்ற கடவுளை ஆராயமுடியாது' என்றால் அதற்கு நான் பதில் கூறவேண்டுவதில்லை. ஹெர்பர்ட் ஸ்பென்சர் (Herbert Spencer) என்னும் மேனாட்டுத் தத்துவ சாஸ்திரி வெகு அழகாகப் பதில் கூறியுள்ளார். அதை மொழிபெயர்த்தெழுதுதலே போதுமானது. அதிலும் ஒரு சிறுபாகமே இவ்வாதத்தை உடைத்தெறியும். அவர் கூறுகிறார்: 'தொடர் (Relation) புடையவைகளைப் பற்றியே சிந்தித்தாக வேண்டுமாகையால் தொடர்புடைய பொருள்கள் யாவையுஞ்சேர்த்து யோசிக்கவேண்டின், இவைகளின் முழுமைக்கும் தொடர்பாக ஓர் தொடர்பில்லாத ஒன்றைக் கொள்ள வேண்டும். இல்லாவிடில் தொடர்புடையதே தொடர்பற்றதாகி வாதத்தை முன்னுக்குப்பின் முரண்பட்டதாகச் செய்யும்' ஆகவே இத்தொடர்பறிவு வாதமும் சரியானதாகாது. இது நிற்க.

இவைகள் யாவற்றிற்குமேல் மேற்சொன்ன கட்சியார்களே 'கடவுள் இருக்கிறதென்றே வைத்துக்கொள்வோம். ஆனால் அதைப் பற்றிய ஆலோசிக்கவேண்டிய அவசியம் யாது?' எனக் கேட்கின்றனர். வயிற்றுப் பசிக்கு எப்படி சோறிடுகின்றோமோ, அதைப் போன்றே இஃது அறிவுப்பசிக்குச் சோறாகும். மற்றும் அரிஸ்டாடில் (Aristotle) கூறியபடி 'வியப்புணர்வே தத்துவத்தின் தந்தை' என்றதற்கேற்ப இவ்வுலகமும், மாபெரு மண்டகோளங்களும் எங்கிருந்து வந்தன? யார் செய்தார்கள்? முதலிய எண்ணங்களைக் காட்டிலும் அதிக வியப்பைத் தரக்கூடிய கேள்வி வேறு யாதுளது? 'நான் எங்கிருந்து யாரால் படைக்கப்பட்டேன்; ஏன் படைக்கப்பட்டேன்? உலகத்தில் எதற்காக வாழவேண்டும்? என்றுகூட அறி

யாமல் வாழ்வதாற் பயனென்ன? வாழ்வென்றாலும், உயிர்ப்பு என்றாலும் அசைதல், மேனோக்கிச் செல்லுதல் என்பதே பொருள். அசைவற்ற தூக்கமே சாவு. அறிவு யென்பது அசையாது மங்கி யிருப்பின் மாசுற்ற நீர்த் தேக்கம்போல் அழுகிவிடும். அது தனது வாழ்விற் றவறலாம், தடுமாறலாம், வீழ்ச்சியுறலாம். ஆனால் இது தான் முடிவு என்று முடிவுகொண்டு ஒரே இடத்தில் அசைவின்றி நிற்கமுடியாது. ஆகவே ஒரு விஷயத்தை—அதுவும் வாழ்க்கையின் அடிப்படையான கேள்வியைப்பற்றி நமக்குக் கவலை யில்லை யென்பது அறியாமையேயன்றி வேறொன்றுமில்லை.

நாம் இதுவரையில் கூறிவந்துள்ள சுருக்கமான வாதங்களால் கடவு ளிருப்பைப்பற்றி யாருக்கும் யாதொருவிதமான ஐயமும் தோன்றாது என எண்ணுகிறோம். இவைகளால் நாம் அறிய வேண்டுவதெல்லாம் கடவுள் உண்டு, அவரைப் பாவிக்கமுடியும், அவரைப்பற்றிச் சிந்தியாதிருக்க முடியாது; அவ்வாறு இருப்பதும் அறியாமை என்பவைகளே. மற்றொன்று நாம் கடைசியாக- ஆனால் முக்கியத்தில் எவ்வாற்றானும் கடையானதன்று- கூறுவதென்ன வெனில், மனிதன், ஏன் ஒவ்வொரு ஜீவராசியும், இன்பத்தையே விரும்புகின்றது. அவ்வின்பமும், அழியாது, குறையாது அள்ள அள்ளப் பெருகும்வண்ணம் நிறைந்து நிற்கவேண்டுமாயின், அவ்வா றுள்ளது கடவுளின்பத்தையன்றி வேறில்லை. கடவுளே அழிவற்ற நித்ய வஸ்துவாகையால் அவரது இன்பமே அழியாது நித்யமாயிருக்க முடியும். மற்றபடி உலகஇன்பங்கள் யாவும் சகடக்கால்போன்று மாறிமாறி வரும். கடவுளையறிந்தவனுக்கு உண்மையில் பயமில்லை. அவனே இவ்வுலகத்திற்கெல்லாம் தலைவன். அவனே எல்லாமாகி றான். அதனாலேயே இராமலிங்கர் பாடுகின்றார்

> சிற்சபையும் பொற்சபையும் சொந்தமெனதாச்சு
> தேவர்களும் மூவர்களும் பேசுதென் பேச்சு
> இச்சமய வாழ்விலெனக் கென்னையினி யேச்சு
> என்பிறவித் துன்பமெலாம்இன்றோடே போச்சு

என. இத்தகைய வீறும், ஞானதீரமும் கடவுளுணர்வால் அடைந்து நாம் வாழ்வில் நலமுறுமாறு எல்லாம் வல்ல இறைவன் அருள் புரிவானாக. கடவுளில்லை என்போரின் பேச்சு வன்மையிற்சிக்கி நாம் இவ் வழியாத இன்பத்தை இழவாதிருப்போமாக.

ஓம் தத் ஸத்

---




## ஸ்ரீயுத பண்டித மோதிலால் நேரு.

(582-ம் பக்கத் தொடர்ச்சி.)

S. V. V.

'பண்டிதமோதிலால் நேருவின் சுதேச பக்திக்கு இணை யார்?' என்று அவரைப் புவியெங்கும் கவிபாடி ஏத்துதற்குக் காரணமாய் நின்றது அவரது தியாகமேயாகும். இளவரசர்களுக்கும் அரிசென்னும்படி அலகபாத்தில் பெரிய செல்வச் சிறப்புகளுடன் அவர் வசித்து வந்ததைப் பற்றி கேளாதார் இலரன்றோ! வாராவாரம் அவருக்கு உடைகள் பாரிஸில் விருந்து எத்தனையோ ஆயிரக்கணக்கான பொருட் செலவில் சலவை செய்யப்பட்டு வந்ததென்னும் உண்மையை யறியாதவர்தான் யார்? அலகபாத்திலுள்ள அவருடைய, 'ஆனந்த பவன்' என்னும் அற்புத மாளிகையில் அவருடைய விருந்தாளியா யிருக்கும் பாக்கியத்தை யடைந்தாரனைவரும் அவ்வானந்த பவனையும் நேருவின் கணக்கிடமுடியாத செல்வப் பெருக்கையுங் கண்டு 'பொன்னகர் சிறந்த தென்பார் புல்லியர்' எனவே அபிப்பிராயப்பட்டார்கள். நேரு அவர்கள் ஒத்துழையாமை இயக்கத்தில் இறங்கியதும் அவரது அபரிமிதமான வாழ்க்கை யாவும் மறைந்தன. துறந்தார் சுகங்களனைத்தையும். எழுந்தார் விரைந்து! சாதி மதமென்னும் சாட்டுதலில்லாக் காதியாடையைக் கருத்துடனணிந்தார். கோடைக் காலங்களில் கிரிவாசஞ்செய்வதையும், பாரிஸில் சலவையான பகட்டான உடைகளை யுடுப்பதையும் அவர் மறந்தார். ஊரூராகச் சுற்றுப் பிரயாணஞ் செய்து கதர்! கதர்!! கதர்!!! எனக்கதற வாரம்பித்தார்; ஒத்துழையாமை இயக்கத்தை வலுப்படுத்தக் கங்கணம் பூண்டார். வரவர நேருவின் தேசசேவை அரசாங்கத்தாருக்குத் திருப்திகரமானதாகத் தோன்றவில்லை. காங்கிரஸ் தொண்டர்களின் உடன்படிக்கைக்கு அவர் கையெழுத்திட்டது குற்றமென்று துரைத்தனத்தார் கருதினர். கருதி அவரையும் அவருடைய குமாரரையும் இரு மருகர்களையும் மற்றும் அவர் குடும்பத்திற் சம்பந்தப்பட்ட சிலரையும் 1921௵ டிசம்பர் ௴ 6௳ சிறைப் பிடித்தார்கள். கனந்தங்கிய இளவரசர் இந்தியாவுக்கு விஜயம் செய்தபோது, அலகபாத்திற்குச் செல்லலுற்ற சமயம், துரைத்தனத்தாரின் கொள்கைகள் சிலவற்றில் தமக்கிருந்த அதிருப்தியைப் பொது மக்கள் வெளியிட நேர்ந்தது. இக்காரியத்தை நேருவே தலைமையாயிருந்து நிறைவேற்றி வைத்தார்.

1921௵ டிசம்பர்௴ 9௳ பண்டிதரும் அவர் மருகர் ஷியாம்லால் நேருவும் ஆறு மாத வெறுங்காவலும், நூறு ரூபாய் அபராதமும், அவ்வபராதத்தைச் செலுத்தத் தவறினல் பின்னும் ஒரு மாதக் கடுங்காவலும் அடையுமாறு தீர்ப்புச் செய்யப்பட்டார்கள். விசாரணையில் நேரு நீதிபதியின் எவ்விதக் கேள்விகளுக்கும் தாம் விடை தரவியலாதென்று மறுத்துவிட்டார். அன்றே அவருடைய ஏகபுத்திரரான ஜவர்லால் நேருவும் சிறை பிடிக்கப்பட்டு ஆறுமாத வெறுங்காவல் விதிக்கப்பட்டார். எல்லோரும் ஏகமாகக் காராக்கிரு

கத்திற் புகுந்தனர். நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாய் வளர்ந்த செல்வர் ஜவர்லால் "தாயின் மணிக்கொடி பாரீர்!" என்று ஆடிப் பாடிக்கொண்டே சிறைக்கோட்டத்தில் நுழைந்தார். மகா பதிவ்ரதா சிரோன்மணியான நேருவின் மனைவியாரும் தம் கணவரோடு சிறை புகுந்தனர்.

ஜவர்லால் நேரு ஆறுமாதங்களுக்குள் விடுதலையடைந்தார். ஆனால் அவர் லக்னௌவிற்குத் தம்முடைய தந்தையைச் சிறையிற்காணச் சென்ற பொழுது வேறு குற்றஞ் சாட்டப்பட்டு மறுபடியும் சிறைப்படுத்தப் பட்டார். மறுநாள் மகாத்மாவின் திருக்குமாரர் தேவதாஸ் காந்தியும் சிறைவாசம் செய்ய நேர்ந்தது. ஜெயில் என்றால் திகில் மிகுந்திருந்ததுபோய் சிறைச்சாலை வித்யாமன்ற மாகிவிட்டது. மகா கல்விமான்கள் எல்லோரும் கூடும் இடமாயிற்று சிறைச்சாலை. தேசவிடுதலைக்கெனத் தலைவர்கள்கூடி ஆலோசிக்கும் சபையாகத் திகழ்ந்தது சிறைச்சாலை. அதிகாலையில் அனைவரும் எழுந்து உதயராகம் பாடிப் பாரததேவியை 'வந்தே மாதரம்' என்று வணங்கித் துயிலெழுப்பலாயினர் தேசீயச் சிறைவாசிகள். அவர்களெல்லோரும் அரசாங்கத்தாரின் அன்னசத்திரத்திற்கு அதிதிகளாய்க்கூடி அளவளாவினர். பெருந் தலைவர்கள் அஞ்சாது சிறைவாசஞ்செய்ய முன் சென்றுவிட்டமையால் நாட்டிலுள்ள தேசீய வாதிகள் பலரும் அவர்களோடு கூடிக்களிக்க ஆயத்தமாயினர். தேசத்திற்காகத் தியாகம் செய்து உழைப்பதென்று கங்கணம் பூண்டவர்களைச் சிறைப்படுத்துவதால் விளையும் பயன் ஏதுமில்லை என்று விரைவில் உணர்ந்த அரசாங்கத்தார் தலைவர்களை விடுதலைசெய்தார்கள். மோதிலால் விடுதலையடைந்ததும் முன்னிலும் பன்மடங்கு தீவிரமாக உழைக்கத் தொடங்கினர். அகில இந்திய மகாசபையில் ஓர் அரியாசனம் அவரை ஆவலுடன் வரவேற்றது. காங்கிரஸ் மகாசபையின் காரியதரிசி பதவி நேருவுக்களிக்கப்பெற்றது. காரியக் கமிட்டி வீரியத்தோடு அவரது தலைமையின் கீழ் உழைத்துவந்தது. குர்ஜா ஜில்லா தேசீய மகாநாட்டிற்கு அவர் தலைமை வகித்தார். சன்மதி முனிப்பேர் சற்குணக் காந்தி காட்டிய காதியாடையைப் பரப்ப, அவர் தமது அந்தஸ்ததையும் கௌரவத்தையும் பாராட்டாது முதுகில் கதர் மூட்டையைச் சுமந்து கதர்! கதர்!! என்று அலகபாத் தெருவில் விற்க வாரம்பித்தார் என்றால் அவருடைய தேசபக்தியை நாம் என்னென்று புகழ்வது? கதர் இயக்கம் தோன்றுவதற்கு முன்பிருந்தே நேரு சுதேசக் கைத்தொழிலை ஆதரித்து அபிவிருத்தி செய்யவேண்டுமென்று உழைத்து வந்தவரன்றோ?

அரசாங்கத்தாரின் சீர்திருத்தங்களில் அவருக்கு அதிகமாக நம்பிக்கை ஏற்படவில்லை. பம்பாயில் 1918-ம் ஆண்டு ஆகஸ்டு செப்டம்பர் மாதங்களிற் கூடிய விசேஷ காங்கிரஸின் மூலமாக நேரு அதிருப்தியை உணர்த்தினர். பின்னர், 1919-ம் ஆண்டு டிசம்பரில் கூடிய அமிர்தசரஸ் காங்கிரஸ் மகாசபையில் அரசாங்கத்தாரின் சீர்திருத்தங்களைக் குறித்து அவற்றால் விளையக்கூடிய சாதகபாதகாம்சங்களை எடுத்துக் காட்டி விளக்கமாகப் பேசினர். நிற்க, ஹிந்துமத மேன்மையையோ, உண்மையான தேசபக்தி உண்டாகுந் தன்மையையோ, வேறு இந்திய வாழ்விற்கு இன்றியமையாத எதையோ நேராக அடைவிக்கும் பான்மையற்று, மேல் நாட்டு முறைப்படி அந்நாட்டு ஆசாரப் பழக்க வழக்கங்களையே மென்மேலும் இந்தியாவிற் புகுத்தி அடிமைப் புத்தியைப் பெருக்கிவரும் தற்காலக் கல்வி முறையை பகிஷ்காரஞ் செய்யவேண்டுமென்ற இயக்கம் ஆரம்பித்தபொழுது நேரு அதனை ஆத

ரித்துச் செய்தசேவை கொஞ்சநஞ்ச மன்று. நியாயவாதிகள் நீதிஸ்தலங்களைப் புறக்கணிக்கவேண்டுமென்னும் உணர்ச்சி எழுந்தவமயம் நேருவே தமது இலக்ஷக்கணக்கான வருமானத்தைத் துறந்து முதலில் நியாயவாதத்தை விட்டார்; தேச மகா கைங்கரியத்தில் இறங்கிய அன்றுமுதல் இன்றளவும் அவர் புரிந்த தளராத உழைப்பே இப்பொழுது அவரை லோக பூஜ்யராக்கிவிட்டது; மேல் கீழ்நாட்டு அறிஞர்கள், ராஜீய நிபுணர்கள், கல்விமான்கள் ஆகிய பலராலும் நன்கு மதிக்கப்பட்டு புகழும்படி செய்துள்ளது. அவர் சிலமாதங்களுக்குமுன் தயாரித்த 'நேரு யாதாஸ்தை'ப் படித்துப் பாராட்டாதார் எவருமிலரன்றோ? நேரு யாதாஸ்தைத் தமிழிலும், தெலுங்கிலும், மலையாளத்திலும், ஹிந்துஸ்தானி மராத்தி முதலிய சகல பாஷையினரும் தத்தம் மொழிகளில் மொழிபெயர்த்துப் பொன்னேபோற் போற்றிக் கற்று உவக்கின்றனர். அமரிக்கா முதலான புறநாடுகளிலும் நேரு யாதாஸ்து இலக்ஷக் கணக்கில் செலவாகி வருகின்றது. இதனை வெளிநாட்டிலும் உள்நாட்டிலும் வெளியாகும் பத்திரிகைகள் யாவும் சர்வ சம்மதமானதென்று பாராட்டிக் கொண்டாடுகின்றன.

நேரு சகல நற்குணங்கட்கும் இருப்பிடமானவர். அவருக்கு விரோதியே கிடையாது. அவரது தயாள சிந்தையையும் அன்புடைமையையும் அறியாதாரிலர். கிணற்றுத் தவளைபோல பழங்கால வைதீக ஆசாரங்களைக் கொண்டாடி, சமூகத்தில் தாராளமாய்ப் பழகாத பண்டிதர்கள் குலத்திற் பிறந்தவராயிருந்தும், நேரு இளமையிலேயே தமது ஆசிரியரான ஹாரிஸன் துரையவர்களுடன் சமபந்தி போஜனம் செய்து மூடநம்பிக்கைகளை ஒழிக்க வழி காட்டினர். வடநாட்டில் மிகவும் முக்கியமாகக் கருதப்படும் கோஷாவை யொழிக்க, அந்த சரஸ்வத் பண்டித வம்சத்தில் அவரே முதலில் முன்வந்தார். அவர் 1899ல் சீர்மையிலிருந்து திரும்பியதும் பிராயச்சித்தம் முதலிய கர்மாக்களைச் செய்ய மறுத்துவிட்டார். அவர் தமது இருபெண்களுக்கும் முதலில் ஹிந்தி கற்பித்துப் பின்னர் இங்கிலாந்திற்கு ஆங்கிலங்கற்க வனுப்பினர். 1918—ல் பம்பாயில் கூடிய விசேஷ காங்கிரஸில் பெண்பாலரும் வந்திருத்தற் கேற்ற வசதிகளைச்செய்தார். இதனின்றும் அவர் பெண் கல்வியை ஆதரித்த பெருமை நன்கு புலப்படும்.

ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்ஸருடைய உபதேசங்கள் எங்ஙனம் ஸ்ரீமத் விவேகானந்த சுவாமிகளின் உள்ளத்தைக் கொள்ளை கொண்டனவோ அது போல மகாத்மாவின் உபதேசங்கள் நேருவின் கருத்திற் கிசைந்தவையாயின. மகாத்மாவைப் போன்றே இவரும் ஆடம்பர வாழ்வை ஒழித்து வாழ்கின்றார். இந்தியா சட்டசபையில் எள்ளளவும் பின்வாங்காது அவர் போராடி வருவதும் உலக மறிந்த விஷயமே.

மகன்றந்தைக் காற்று முதவி யிவன்றந்தை
என்னோற்றான் கொல்லென்னுஞ் சொல்.

என்னும் பொய்யா மொழிக் குதாரணயாய்த் தோன்றி யுள்ளவரான அவருடைய திருக்குமாரர் பண்டித ஜவர்லால் நேரு அவர்கள் ஆற்றிவரும் அரும் பெருந் தொண்டை அறியாதா ரெவருமில்லை. பண்டித மோதிலால் நேரு வாழ்க! யுவர் ஜவர்லால் வாழ்க! அவர்களது தேசாபிமானம் ஓங்குக. இறைவன் அவர்களுக்கு ஆயுளையும் ஆற்றலையும் அருள்க.




## உலக ஞானம்.

(574-ம் பக்கத் தொடர்ச்சி.)

(சிவானந்தசாகர யோகீஸ்வரர்)

அரசனே! இவ்வாறு மனிதர்கள் மரம் செடி கொடி பசு பட்சிகள் ஒன்றும் இல்லாமல் ஆகாயம் அளாவ வெள்ளம் பரந்திருந்த அந்தக் காலத்தில் நான் ஒருவனாகவே அந்த வெள்ளத்தில் மிதந்துகொண்டிருந்தேன். நீண்ட காலம் அலைந்து களைத்துப்போனேன். இளைப்பாற ஒரு இடமும் அகப்படவில்லை. பிறகு அந்த வெள்ளத்தில் நடுவில் ஒரு ஆலமரத்தைக் கண்டேன். அம்மரத்தின் ஒரு பெரிய கிளையில் ஒரு கட்டிலும் அதன் மேல் ஒரு அழகான படுக்கையும் விளங்கியது. அதன் மேல் சந்திரனைப் போன்ற அழகுள்ள முகத்தையும் தாமரை மலரின் இதழ்போன்ற அழகிய கண்களையும் உடைய ஒரு சிறிய பிள்ளையைக் கண்டேன். கண்டதும் எனக்கு மிகுந்த ஆச்சரியமுண்டாயிற்று. சர்வமும் அழிந்து போயிருக்கிறபோது இந்தப் பெரிய வெள்ளத்தில் ஒரு சிறிய பிள்ளை எப்படிப் படுத்துக்கொண்டிருக்கக் கூடுமென்று என் மனதுக்குள் வியந்து யோசித்துக்கொண்டிருந்தேன். தபோ மகிமையால் நான் எல்லாவற்றையும் அறியக் கூடியவனாயிருந்தும் இந்த சிறு பிள்ளையின் விஷயத்தில் எனக்கு ஒன்றுந்தோன்றவில்லை. அந்தக் குழந்தை ஸ்ரீ வத்ஸ மறுவையும் துளசி மாலையையும் உடையவனாயிருந்த படியால் இவன் இலட்சுமிகாந்தனாகிய விஷ்ணுவாக இருக்கலாமென்று கருதினேன். மிகுந்த காந்தியையும் உடைய அந்தச் சிறுவன் என்னைப் பார்த்து இனியவசனங்களாலே ஏ குழந்தாய்! நீ களைப்படைந்திருக்கிறாயென்றும், களைப்பாற இடந் தேடுகிறாயென்றும், எனக்குத் தெரியும். பிருகு குலத்தவனே! மார்க்கண்டேயா! உனக்கு இஷ்டமான வரைக்கும் இங்கே இளைப்பாறு. மஹாரிஷியே, என் வயிற்றுக்குள்ளே புகுந்து களைப்பாறு. இஷ்டமான வரைக்கும் களைப்பாறு. அந்த இடத்தைத் தான் உனக்கு களைப்பாற வைத்திருக்கிறேன். உன்னிடத்தில் யான் பிரியமாயிருக்கிறேன் என்றான்.

அரசனே! நீண்ட ஆயுள் உள்ளவனும் மனுஷத்துவ முடையவனுமாயிருக்கிற என்னை மரியாதை யில்லாமலும் மதியாமலும் பேசினவுடனே தன் வாயைத் திறந்தான். நான் என் செயலற்று அவன் வாயினுள் புகுந்தேன். புகுந்ததும் நாடு நகரங்களுடன் கூடினதான உலக முழுமையும் பார்த்தேன். அவனுடைய வயிற்றுக்குள் அலைந்துகொண்டிருக்கையில் கங்கை, யமுனை, சரஸ்வதி, கௌசிகி, வேத்திரவதி, சிந்து, கோதாவரி, நர்மதை முதலிய பல நதிகளையும் பார்த்தேன். சுறாமீன்கள், முதலைகள், பலவகை இரத்தினங்களுடன் கூடின சமுத்திரத்தையும் பார்த்தேன். சந்திரன் சூரியன் நட்சத்திரங்களுடன் கூடி பிரகாசிக்கிற வானத்தையும் பார்த்தேன். அழகிய அரணியங்கள் வனங்களுடன் கூடின பூமியையும் பார்த்தேன். அதில்

அநேக பிராமணர்கள் யாகம் செய்துகொண்டிருக்கிறதையும் பார்த்தேன். மற்ற வருணத்தவர்க்கு நன்மையையே செய்கிற க்ஷத்திரியர்களையும் பார்த்தேன். விவசாயம் செய்துகொண்டிருக்கிற வைசிய சூத்திரர்களையும் கண்டேன். இமய மலை, ஹேமகூடம், நிஷதம், சுவேதம், கந்தமாதனம், மந்தரம், நீலம், மேரு, விந்தியம் முதலிய மலைகளையும் கண்டேன். சிங்கம் புலி கரடி முதலிய பிராணிகளையுங் கண்டேன். தேவர்கள், இந்திரன், சாத்தியர், ஆதித்தியர், பிதிரர்கள், நாதர்கள், வசுக்கள், கந்தர்வர், ரிஷிகள், தானவர்கள், பன்னகர்களையும் கண்டேன். தேவர்களுக்குச் சத்துருவான எல்லாரையும் பார்த்தேன். சகல பிராணிகளுடன் கூடின உலகத்தில் அலைந்துகொண்டு அவன் வயிற்றில் நெடுங்காலம் வசித்தேன். ஆயினும் அவன் சரீரத்தின் எல்லையை நான் காணவில்லை. அவன் சரீரத்தின் எல்லையைக் காண விரும்பி ஆவலுடன் அலைந்தும் காணவில்லை. பிறகு இவர் தான் மூலகாரணரென்று தெரிந்துகொண்டு வளமளிப்பவரான அவருடைய ஆதரவை நாடினேன். உடனே ஒரு பெருங் காற்று வீசினதினாலே அவருடைய திறந்த வாயினின்றும் வெளியில் வந்தேன்.

வந்தபின் சகல உலகங்களையும் விழுங்கின அந்தச் சிறுவன் ஸ்ரீ வத்ஸ மறுவுடன் ஆலமரத்தின் ஒரு பெரிய கிளையில் உட்கார்ந்திருப்பதைக் கண்டேன். அவர் என்னைப் புன்முறுவலுடன் நோக்கி ரிஷியே மார்க்கண்டேயா! நீ சில காலம் என் வயிற்றில் வசித்ததனால் நான் உன்னிடத்தில் பேசுகிறேன் என்றார். உடனே நான் ஞான திருஷ்டியை அடைந்தேன். அதனாலே நான் உலக மாயை ஒழிந்து மெய்ஞ் ஞானத்தை அடைந்தேன். அவருடைய மஹா சக்தியை அறிந்து அவர் பாதங்களில் வணங்கினேன். கைகளைக் கூப்பிக்கொண்டு பக்கத்தில் நின்று தரிசித்தேன். அவரைத் துதித்து 'தேவனே! உம்மையும் அற்புதமான உமது மாயையும் தெரிந்துகொள்ள விரும்புகிறேன்' என்று கூறி வணங்கினேன். 'உமது வாயின் வழியாக உமது வயிற்றில் புகுந்து முற்றும் பார்த்தேன். தேவ கந்தர்வர், யட்சர், தானவர்களுடன் கூடின சராசர மயமான உலகம் முழுமையும் பார்த்தேன். உமது சரீரத்தில் முற்றும் உலாவித் திரிந்தேன். உமது கருணையால் நான் ஞாபக சக்தியை இழக்கவில்லை. உமது இச்சையின்படியே நான் வெளியில் வந்தேன். என் இச்சையால் வரவில்லை. ஆகையால், குற்றமற்றவாகிய உம்மை நான் அறிந்துகொள்ள விரும்புகிறேன். உலகம் முழுமையும் விழுங்கின நீர் ஒரு சிறிய பிள்ளையைப்போல் ஏன் உட்கார்ந்திருக்கிறீர். இவைகளை யெல்லாம் எனக்குச் சொல்லவேண்டும். உலகம் ஏன் உமது வயிற்றில் இருக்கிறது? எத்தனை காலம் நீர் இங்கே யிருப்பீர்? தேவ தேவனே! இவைகளை எனக்கு விரிவாய்ச் சொல்லவேண்டும். நான் கண்ட காட்சி மனதுக்கு எட்டாததாயும் அதிசயமாயு மிருக்கிறது. அதனால் கேட்கிறேன்' என்று சொன்னேன். தேவ தேவனாகிய அவர் எனக்குச் சமாதானம் சொல்லிப் பிறகு சொல்கிறார்:

ஏ பிராமணா! தேவர்கள் கூட உண்மையை அறிய மாட்டார்கள்; நான் உம்மிடத்தில் பிரியமாயிருப்பதனாலே சொல்கிறேன். நான் உலகத்தைச் சிருஷ்டித்த வகையைக் கேள். நீ உண்மையான பக்தன். என்னுடைய ஆதாரவை நீ விரும்புகிறாய். உன் தோற்றத்தினாலே நீ பெரிய பிரமசாரியாயிருக்கிறாயென்று தெரிய வருகிறது. நான் பூர்வத்தில் ஜலத்துக்கு நாரம் என்று பேரிட்டேன். அந்த ஜலம் எனக்கு அயனமாய் (இருப்பிடமாய்) இருக்கிறபடியால் எனக்கு நாராயணன் என்று பேர் வந்தது, பிராமணா! ஆகையால் நாராயணன் எல்லாவற்றுக்கும் காரணமானவன்; நித்தியன், விகாரமற்றவன். எல்லாவற்றையும் சிருஷ்டித்துச் சங்கரிக்கிறவன் நானே. நானே விஷ்ணு, சிவன், பிரமா, இந்திரன், யமன், குபேரன், முதலியோராவேன். நான் தாதா விதாதா. நான் யக்ஞ சொரூபி. என் வாய் அக்கினி. நான் சோமன், எல்லாவற்றையும் நடத்துகிறவன். பூமி எனக்குப் பாதம், சந்திர சூரியர்கள் என்னுடைய கண்கள், வானம் என்னுடைய தலை, ஆகாயமும் திசைகளும் எனக்குக் காதுகள், ஜலம் என்னுடைய வேர்வை, வெளியே எனது சரீரம். வாயு எனது மனம். தட்சிணையோடு கூடிய அநேக யாகங்களை நான் செய்திருக்கிறேன். தேவர்களுடைய யாகத்தில் நான் எப்போதும் பிரசன்னமாயிருக்கிறேன். வேத முணர்ந்தவர்கள் எனக்கு அர்ப்பணமாக வேள்விகளைச் செய்கிறார்கள். பூமியிலுள்ள க்ஷத்திரியர் வைசியர்கள் என்பாரும் சொர்க்கத்தை விரும்பி என்னை வணங்குகிறார்கள். மேருமந்தர மலைகளால் அலங்கரிக்கப்பட்டிருப்பதும் கடல்சூழ்ந்துள்ளதுமான இந்தப் பூமியைச் சேஷன் வடிவமாயிருந்து நான் தாங்குகிறேன். பூர்வ காலத்தில் ஜலத்தில் முழுகியிருந்த பூமியை நான் வராக உருவங்கொண்டு தூக்கியெடுத்தேன். நானே வடவாமுகாக்கினியாயிருந்து ஜலத்தைக் குடிக்கிறேன். அவைகளை மறுபடியும் உண்டாக்குகிறேன். என்னுடைய சக்தியினாலே எனது முகம் புஜம் தொடை பாதங்களிலிருந்து நாலு வருணங்களும் உண்டாயின. ரிக்கு யஜுஸ் சாமம் அதர்வணமென்கிற வேதங்கள் தோன்றி என்னிடத்திலேயே ஒடுங்குகின்றன. தவம் பண்ணுகிறவர்களும், சாந்தமுள்ளவர்களும், முற்றும் அடங்கினவர்களும், ஞானத்தை விரும்புகிறவர்களும், காமம், கோபம், பகை இவைகளை ஒழித்தவர்களும், தர்மத்தைச் செய்கிறவர்களும், கர்வமில்லாதவர்களும், உலக ஆசையை முற்றும் விட்டவர்களும், ஆத்மஞான முள்ளவர்களுமான பிராமணர்களும் எல்லோரும் ஆழ்ந்த பக்தியுடன் என்னை வணங்குகிறார்கள். ஸம் வர்த்தகம் என்கிற அக்கினியும், ஸம் வர்த்தகம் என்கிற காற்றும் நான்தான். வானத்தில் காணப்படுகிற நட்சத்திரங்களெல்லாம் என் சரீரத்திலுள்ள ரோமத்தின் துவாரங்கள் என்று அறி. நாலு திசைகளும் சமுத்திரங்களும் எனக்கு வஸ்திரமும் படுக்கையும் இருப்பிடமுமாகும் என்று தெரிந்துகொள். அவைகள் தேவ காரியத்திற்காக என்னால் பரப்பப்பட்டிருக்கின்றன என்று தெரிந்துகொள். ஆசை, கோபம், மகிழ்ச்சி, பயம், அறியாமை இவைகளெல்லாம் என்னுடைய பலவகையான சொரூபங்களாமென்று தெரிந்துகொள். சத்தியம், தவம், தர்மம், சமாதானம், ஜீவ இம்சை செய்யாமை, மற்றுமுள்ள சத்கருமங்களினால் மனிதர்கள் அடைவனவெல்லாம் என்னால் நியமிக்கப்பட்டனவென்று தெரிந்துகொள். என்னுடைய விதியால் நடத்தப்பட்டு, என்னிடத்தில் உலாவுகிற மனிதர்கள் எல்லாரும் என்னாலேயே மயங்குகின்றனர். அவர்கள் தங்கள் இஷ்டப்படி நடக்கமுடியாது.

வேதங்களை உணர்ந்தவர்களும், ஆத்மாவில் திருப்தி அடைந்திருப்பவர்களும் கோப மில்லாதவர்களுமான பிராமணர்கள் தவம் செய்து பெரிய பயனைப் பெறுவார்கள். துர்நடத்தை யுள்ளவர்களும், பொருளாசை யுள்ளவர்களும், இழிந்தவர்களும், அசுத்தமானவர்களும் அப்படிப்பட்ட பயனை அடையமாட்டார்கள். புலனடக்க முள்ளவர்களே அப்படிப்பட்ட பயனை அடைவார்களென்றும், மூடர்கள் அடையமாட்டார்களென்றும் தெரிந்துகொள். தபஸே அந்தப் பயனைத் தருவதென்றும் தெரிந்துகொள். எப்போது நீதியும் தர்மமும் குறைந்து, பாபம் அதிகரிக்குமோ அப்போது நான் அவதாரம் பண்ணுவேன். பயங்கரமானவர்களும், துஷ்ட சித்த முள்ளவர்களுமான தைத்திரியர்கள் பூமியிற் பிறந்து தேவர்களால்கூடச் சங்கரிக்கப் படாதவர்களா யிருக்கிற காலத்தில் நான் புண்ணிய குலத்தில் அவதரிப்பேன். பாவிகளைச் சங்கரித்துத் தீமைகளை ஒழித்துச் சமாதானத்தை நிலைநிறுத்துவேன். என்னுடைய சொந்த மாயையாலே தேவர் கந்தர்வர் அரக்கர்களையும் மற்றுமுள்ள சராசரங்களையும் நான் சிருஷ்டிப்பேன். காலம் வந்தபோது அவைகள் எல்லாவற்றையும் சங்கரிப்பேன். கிருதயுகத்தில் நான் வெண்ணிற முள்ளவனு யிருப்பேன். திரேதாயுகத்தில் மஞ்சள்நிறத்துட னிருப்பேன். துவாபர யுகத்தில் செம்மைநிற முள்ளவனு யிருப்பேன். கலியுகத்தில் தர்மம் கால்பங்குதா னிருக்கும். அந்த யுகமுடிவில் நான் மரணதேவதை வடிவங் கொண்டு எல்லாவற்றையும் சங்கரிப்பேன். சகல சராசரங்களுடன் மூன்று உலகங்களையும் அழித்துவிடுவேன். மூன்று அடிகளால் எல்லா உலகங்களையும் மூடிவிடுவேன். நான்தான் உலகத்திற்கு ஆத்மா. சகல சுகங்களுக்கும் நான்தான் மூலம். சகல கர்வங்களையும் அடக்குகிறவன் நான்தான். நான் சர்வ வியாபகன், நான் அகண்டன், நானே புலன்களுக்கு அதிபதி, நான் சர்வ வல்லமை யுள்ளவன். காலச் சக்கரத்தை நடத்துகிறவன் நானே. நானே உருவமற்றவன்; சகலத்துக்கும் காரணமானவன். நான் எல்லாவற்றையும் வியாபித்திருப்பேன். என்னை ஒருவரும் அறியமாட்டார். நானே பக்திரூபமானவன். எல்லா உலகத்தாராலும் வணங்கப்படுகிறவன். நீ என் வயிற்றுக்குள் அடைந்த துன்பமெல்லாம் உனது நன்மைக்கென்றே நினை. நீ என் வயிற்றுக்குள் பார்த்தவைகளெல்லாம் என் ஆக்ஞைக்குட்பட்டவைகள். சகலலோக பிதாமகனுன பிரமதேவன் என் சரீரத்தில் பாதியாயுள்ளவன், நான் சங்கு சக்கரம் வாள்தரித்த நாராயணன், நாலுயுகங்களையும் விட ஆயிரநாலு மடங்கு அதிகமான காலம் தூங்குவேன். ஜீவாத்மாக்கள் எல்லாம் அப்போது அறிவற்றிருக்கும். அக்கால மெல்லாம் நான் இங்கே வசிப்பேன். உனக்கு வரம்கொடுத்தவனும் நான்தான். பெரிய வெள்ளத்தையும் அதனுல் சகல பிராணிகளும் அழிந்துபோனதையும் குறித்து நீ வருத்தப்பட்டாய். அதை நான் அறிவேன், அதற்காகவே என்வயிற்றுக் குள்ளிருக்கிற சகல சராசரங்களையும் நான் உனக்குக் காட்டினேன். நான் உன்னிடத்தில் பிரியமா யிருக்கிறேன். நீ அதைப் பார்த்து அதிசய மடைந்து மயங்கினுய். அதனுலேதான் சீக்கிரமாக உன்னை வெளியில் கொண்டுவந்தேன். தேவர்களாலும் அசுரர்களாலும் அறியப்படாத பொருளைப்பற்றிச் சொன்னேன். பிரமதேவன் விழித்துக் கொள்கிறபோது சகல பிராணிகளையும் ஆகாயம் பூமிகளையும் சந்திர சூரியர்களையும் சிருஷ்டிப்பேன். வாயு மண்டலத்தையும் தண்ணீரையும் உண்டாக்குவேன், என்று சொன்னர்.

இப்படிச் சொல்லிவிட்டு அந்த அற்புத தெய்வம் மறைந்துவிட்டது.

அதன்பின் பலவகையான ஜீவசிருஷ்டிக ளுண்டானதையும் பார்த்தேன். புண்ணியவானே! பூர்வகாலத்தில் இந்த அதிசயங்களை யெல்லாம் கண்டேன். பூர்வகாலத்தில் நான்கண்ட அந்தத்தெய்வந்தான் இந்தக் கிருஷ்ணமூர்த்தி சொரூபமாக வந்து ஒன்றும் அறியாதவர்போல நடித்துக்கொண்டிருக்கிறது. யதுவம்சத்தவரான அந்தக்கண்ணனே பரமாத்மா. அவர் நித்தியர், அழிவற்றவர்; மேலானவற்றுக் கெல்லாம் மேலானவர். இவர் கொடுத்த வரத்தினாலே எனக்கு மறதி கிடையாது. ஞாபகசக்தி குறைவதில்லை. இவரைக் கண்டவுடன் பூர்வத்தில் நான் கண்ட காட்சிகளெல்லாம் ஞாபகத்திற்கு வருகின்றன. கௌரவ சிரேஷ்டராகிய இவரை நீ சரணமடை, யென்று சொன்னார். யுதிஷ்டிரர் பத்தினி தம்பிமார்களுடன் கிருஷ்ணன் திருவடிகளில் பணிந்தார். நானும் வணங்கினேன். கண்ணன் இனியவசனங்களால் பாண்டவர்களைத் தேற்றினார்.

பிறகு யுதிஷ்டிரர் மார்க்கண்டேயரை நோக்கி, 'நீர் சொன்னவைகளெல்லாம் அற்புதமும் ஆச்சரியமுமாகவே யிருக்கின்றன. கலியுகத்தில் என்னென்ன சம்பவிக்கும்? தர்மம் எப்போது அழியும்? என்ன மிகுந்திருக்கும்? அப்போது மனிதர்களுடைய சக்தி எவ்வளவாயிருக்கும்? அவர்களுக்கு உண்டியாது? அவர்களுக்கு மகிழ்ச்சி எதில்? ஆயுள் எவ்வளவு? நடை உடைகள் எப்படியிருக்கும்? கிருதயுகம் எப்போது பிறக்கும்? முனிவரே இவைகளை யெல்லாம் எனக்குச் சொல்லவேண்டும். உமது வசனங்களெல்லாம் வினோதமாயும் மதுரமாயு மிருக்கின்றன, என்றார். மார்க்கண்டேயர் எங்களுக்கு மகிழ்ச்சியுண்டாக்கும் பொருட்டு மகிழ்ச்சியுடன் சொல்கிறார்.

(தொடரும்.)




## வேதாந்த சாரசங்கிரக வசனம்.

(589-ம் பக்கத் தொடர்ச்சி.)

(பூ. ஸ்ரீநிவாசன், தமிழ்ப் பண்டிதர், சித்தூர்.)

எந்த பிரஹ்மம் மறைதலில்லாத ஞானவடிவமாகிய தன்னிடத்தில் கற்பிக்கப்பட்ட ஆகாசம் முதலிய சகல பிரபஞ்சங்களுக்கும் ஆதாரமாயிருக்கின்றதோ, பிரத்தியட்சமாய்த் தன் பிரகாசத்தினல் பிரகாசத்தைப் பரப்புகின்றதோ, கேவலம் ஞானரூபமாகிய அந்தப் பிரஹ்மமே நீ. சமாதி நிஷ்டர்களாகிய பரமஹம்சர்களால் நிர்மலமாகிய தங்கள் அந்தக்கரணங்களி னிடத்து அளவற்ற ஆனந்தமாகிய நிஜவடிவத்தைப் பிரத்தியட்சமாய்ப் பார்த்து எப்பொழுதும் நன்ருய் ஆனந்தமடையப் படுகின்றதோ, கேவலம் ஞான மந்திரரூபமாகிய அந்தப்பிரஹ்மமே நீ. எந்தப் பிரஹ்மம் தான் உள்ளும் புறமும் அகண்டமாய் ஏகரூபமாகிப் பிரகாசிப்ப தாகுமோ, மூடசித்தர்களுக்கு மித்தியா பதார்த்தமாய்க் காணப்படுகின்றதோ, தனக்குத்தானே பிரகாசிப்பதோ, இத்தகைத்தென்று இயம்பக்கூடாததோ அத்தகைய பிரஹ்மமே நீ. சுருதிகளால் சொல்லப்பட்டதும் நாசமில்லாததும் (தான் எல்லாவற்றிற்கும் ஆசிரயமா யிருப்பதே யன்றி, தான் பிறிதொன்றை ஆசிரயித்திருப்ப தன்ருகலின்) நிராசிரியமானதும் பிரமாணங்களால் அறியப்படாததும் சச்சிதானந்த வடிவமானதும் அத்துவைத வஸ்துவானதுமான எந்தப் பிரஹ்மமுள்ளதோ அந்தப் பிரஹ்மமே நீ.

நற்சீடனே! உன்னிடத்தில் சரீரமும் அதன் தர்மங்களும் ஆரோபமாகப் பிராந்தியால் தோற்றுவதன்றி உண்மையில் அவை சிறிதும் இல்லை. ஆதலால் நீ உற்பத்தியில்லாதவன்; ஆகையால் உனக்கு மரண பயமின்ரும்; அதனுல் நீ பரிபூரணனு யிருக்கிருய். நீ பிராந்தியோடு கூடிய பார்வையால் எந்தெந்த வஸ்துவைப் பார்க்கிருயோ அந்தந்த வஸ்துவை (பிராந்தியை நீக்கி) தத்துவ ஞானதிருஷ்டியால் பார்த்தால் அவ்வெல்லாப் பொருள்களும் நீயாகவே யிருக்கிருய். உலகத்தில் உனக்கன்னியமாக வேருெரு சிறிதுமில்லை. இரண்டாவதல்லாத உனக்கு யாரால் பயம் நேரிடும். 'காணப்படும் இவையனைத்தும் நானே' என்று எல்லாவற்றையும் தன் வடிவமாகவே பார்க்கும் ஞானிக்கு எதனுல் பயமுண்டாகும்? ஒன்ருனு முண்டாகாது. ஆகையால் நீ பயமில்லாததும் நித்தியமானதும் ஆனந்த வடிவினதும் நிஷ்களமானதும் கிரியையில்லாததும் சாந்தவடிவினதும் எப்பொழுதும் நாசமற்றதுமாயுள்ள பிரஹ்மமே யாகிருய். நீ தெரிந்து கொள்ளுகிறவனும் (காண்பான் அல்லது ஞாதுரு) தெரிந்து கொள்ளத்தக்க வஸ்துவும் (காட்சிப் பொருள் அல்லது ஞேயம்), தெரிந்துகொள்ளும் ஞானமும் (காட்சி ஞானம்) (இவை திரிபுடி எனப்படும்.) இல்லாததும், தெரிந்து கொள்பவனைக் காட்டினும் பின்னமர்காததும் சித்வடிவமானதும் அகண்டமாயுள்ளதுமாகிய பிரஹ்மமே யாகிருய். எது எல்லாப் பொருள்களாயும் அவற்றிற்கு வேருனதாயும் 'இது

வல்ல இதுவல்ல' வென்று எல்லாவற்றையும் நேதி செய்யுங்காலத்து நீக்க முடியாமல் முடிவில் எஞ்சி நிற்பதாயுமுள்ளதோ அந்த சத்திய சாஸ்வத ஏக அனந்த சுத்தபுத்த சொரூபமாயிருக்கிறாய். சத்தியம் ஆனந்தம் அகண்டம் நிர்க்குணம் நிஷ்கிரியம் நிர்விகாரம் பிரத்தியக பின்னம் (அந்தராத்மாவினும் வேறாகாதது) பரம் நிர்மலம் ஞானரூபம் முதலியவற்றைச் சொரூபமாக வுடைய பிரஹ்ம சொரூபமே நீ யாகிறாய்.

'பிரஹ்மமே நான்; நானே நிர்க்குண நிர்விகார சொரூப பிரஹ்மம்' என்றிவ்வாறு பாவித்தலாகிய இடைவிடாத அகண்டாகார விருத்தியால் கிரியையற்ற பிரஹ்மத்தில் நிலைத்திருப்பாயாக.

(விருத்தி என்பதற்குத் தொழில் என்பது பொருளாம். இது இங்கு மனத்தின் தொழிலைக் குறிக்கும். அந்த மனோவிருத்தி துவிதவிருத்தி சாட்சி விருத்தி அகண்டாகார விருத்தி எனப் பல திறப்படும். அவற்றுள், (1) தேகம் முதலானவற்றை 'நான்' என்றால் துவிதவிருத்தியாம். இது சாதாரணமாக அனைவரிடத்தும் உலக விவகார காலங்களில் நிகழ்வதாம். (2) மனதை உள்முகப் படுத்தி இத்தேகம் முதலியவை நானல்ல. இவ் வெல்லாவற்றையும் அவற்றின் காரியங்களையும் அறிந்து கொண்டிருக்கும் சாட்சியே நான் என்றறிதல் சாட்சி விருத்தியாம். (3) அங்ஙனம் சாட்சியா யுள்ள நான் பிரஹ்மத்தினும் பின்னமாகாமல் அகண்டமாய் விளங்கும் பிரஹ் மமே நான் எனப்பாவித்தல் அகண்டாகார விருத்தி யெனப்படும். இங்கும் திரிபுடியுண்டாகலின் இவ்விருத்தியையும் தள்ளி பிரஹ்ம சொரூபமாகவே விளங்குதலே சாட்சாத்காரமாகிய நிஜ நிலையாம். இதனை,

> தேக முதல் நானென்னல் துவித விர்த்தி
> திகழ் சாட்சி நானென்னல் சாட்சி விர்த்தி
> ஏகபரம் நானென்னல் அகண்டவிர்த்தி
> இவ்விதமாம் விருத்திகளே தொன்று மின்றிச்
> சோகமுறு சுத்தபர சொரூப வென்றே
> சுயஞ்சோதி வடிவாகச் சொலிக்கு மந்தோ

என்று ரிபுகீதை கூறுவதனாலுமுணர்க.)

உத்தம மாணவக! பேத பாவங்களனைத்தையும் தள்ளி உன்னிடத்தில் பரமானந்தத்தை உண்டாக்கும் இவ்வகண்டாகார விருத்தியினால் எஞ்சி யுள்ள பிராரப்தத்தைக் (ஆயுட்காலத்தை) கழிப்பாயாக. ஓ வித்துவானே! பிரஹ்மானந்த ரசத்தை யனுபவிப்பதில் விருப்பங்கொண்ட சித்தத்துடனே சமாதி நிஷ்டையுடையவனாக யிருப்பாயாக.

சீடன்:—குருநாதா! இந்த அகண்டாகார விருத்தியானது மகா வாக்கியார்த் தத்தைக் கேட்ட மாத்திரத்தில் உண்டாய்விடுமோ? சமாதி யாவதென்ன? அது எத்தனை வகைப்படும்? அதற்குச் சாதனம் யாது? சமாதி விக்கி னங்களெவை? இவற்றை அடியேனுக்கு அறிவிக்கப் பிரார்த்திக்கிறேன்.

### அதிகார நிருபணம்

குரு:—ஞானபுத்திரா! உத்தமர் மத்திமர் முதலாகச் சொல்லப்படும் பேதங் களால் அதிகாரிகள் பல திறப்படுவர். அவர்கள் புத்தி சக்திக்குத் தக்க படி அகண்டாகார விருத்தியுண்டாகும். (உத்தமர்களுக்கு மகாவாக்கி யத்தைக் கேட்டவளவிலும் ஏனையோர்க்கு அப்பியாச முதிர்ச்சி யினாலும் உண்டாம்)

**சீடன்:—உத்தமாதிகாரிகள் யார்?**

**குரு:—**எவன் பூர்வ ஜென்மத்திலேயே சிரத்தையோடும் பக்தியோடும் சத் கருமங்களைச் செய்து பரமேஸ்வரனைப் பூசித்து அவரனுக்கிரகம் பெற்றிருந்து இந்த ஜன்மத்தில் நித்தியாநித்திய வஸ்து விவேகம் தீவிர வைராக்கியம் சன்னியாசம் முதலிய சாதனங்களோடு கூடினவனாயிருக்கிறானோ அவனே உத்தமாதிகாரியாவன். இவனுக்குக் குருவானவர் அத்தியாரோப அபவாத யுக்திகளால் மகா வாக்கியத்தை உபதேசித்தவளவில் 'நான் பிரஹ்மம்' என்னும் அகண்டாகார விருத்தியுண்டாகிறது. சிதாபாசனோடுகூடின இந்த அகண்டாகாரமாகிய சித்தவிருத்தி தனக்கு பின்னமாகிய பரப்பிரஹ்மத்தையே விஷயமாக்கி ஆவரணம் என்னும் லட்சண முடையதாய ஆத்மாவை யடைந்திருக்கும் அஞ்ஞானத்தை யழிக்கும். (இந்த அகண்டாகார விருத்தி ஆவர்ணவடிவ அஞ்ஞானத்தை அழிக்குமென்பது அபிப்பிராயமாம்.)

நூல் முழுதும் எரிந்து போவதனால் அதன் காரியமாகிய ஆடையும் எரிந்து போவதுபோல அகண்டாகார விருத்தியினால் அஞ்ஞானம் நசித்தவளவில் அதன் காரியமனைத்தும் நசித்துப்போகும். ஜீவத்தன்மையும் அஞ்ஞான காரியமாகலின் அதுவும் நசிக்கும். எப்படி விளக்கின் ஒளியானது சூரியனைப் பிரகாசிக்கச் செய்யும் சாமார்த்திய முடையதாகாதோ அப்படியே அந்தக்கரணத்தில் பிரதிபிம்பித்த சிதாபாசனுடைய சைதன்யம் சுயம் பிரகாசமாகிய பரப்பிரஹ்மத்தைப் பிரகாசிப்பிக்கும் வன்மை யுடையதாகாது. (பிம்பம் பிரஹ்ம சைதன்யம்; பிரதிபிம்பம் ஜீவ சைதன்யம்) இந்த ஜீவ சைதன்யம் 'நானே பிரஹ்மம்' என்று அகண்டாகார விருத்தியினால் பாவித்தால் நடுப்பகலில் வெய்யிலில் வைக்கப்பட்ட விளக்கு ஒளி யிழப்பதுபோல சுயம் பிரகாசமாகிய பரப் பிரஹ்மத்தின் பிரகாசததினால் ஜீவ சைதன்யத்தின் உபாதி நசித்துத் தனக்குப் பிம்பமாகவுள்ள பரப்பிரஹ்மமே யாகின்றது. கண்ணாடி எதிரிலுள்ள பொழுது அதில் முகத்தின் பிரதி பிம்பம் காணப்படுகின்றது. அக்கண்ணாடியை எடுத்துவிட்டால் அந்த பிரதி பிம்பம் முகமே யாகின்றது. அதுபோல, உபாதியுள்ளபோது மாத்திரமே ஜீவ சைதன்யம் காணப்படும். உபாதி நசித்தவக்கணமே அது (ஜீவ சைதன்யம்) பரமாத்மா வாகின்றது.

கடாஞ்ஞானமுடைய (குடம் இன்னதென்றறியாத) வொருவன் தன் ஆப்தனுடைய வசனத்தால் குடம் இத்தகையதென்று கேட்டதும் அவன் சித்தத்தில் கடவடிவ விருத்தியுண்டாகும். அந்த விருத்தியால் கட சம்பந்த அஞ்ஞானம் நசிக்கும். அவ்வளவில் அந்தக்கரணத்தில் பிரதி பிம்பித்துள்ள சிதாகாசன் கடத்தைக் காணுமலே 'இது கடம்' என்று பிரகாசிக்கச் செய்வான். அவ்வாறு அந்த சிதாகாசன் சுயம் பிரகாசமாகவுள்ள பரப் பிரஹ்மத்தைப் பிரகாசிக்கச் செய்யமாட்டான். வஸ்து விஷயத்தில் விருத்தி வியாப்தி பல வியாப்தி என இருவகைப் பேதமுண்டு. இவற்றுள் (1) விருத்தி வியாப்தியாவது:—வஸ்து இத்தகையதென்று மனோ விருத்தியாலறிதல். (2) பல வியாப்தியாவது:—கண்களாற் காணக் கூடியதாயும் ஸ்பரிசிக்கக் கூடியதாயுமுள்ள வஸ்துவை யறிதல். இந்த பல வியாப்தி கடவிஷயத்தில் சம்பவிக்குமேயன்றி ஆத்ம விஷயத்தில் சம்பவியாது. ஆதலால் பிரஹ்மம் சூட்சும புத்தியாலறியப் படுவதாமென்று சுருதி கூறுகின்றது. மந்த புத்தி

யுடையவர்களுக்கு மனன நிதித்தியாசனங்களில்லாமல் மகாவாக்கிய சிரவணத்தால் மாத்திரம் அகண்டாகார விருத்தி யுண்டாகாது.

சிரவணுதி நிருபணம்.

சிரவணத்திஞலும் மனனத்திஞலும் எப்பொழுதும் தியானம் செய்வதஞல் புத்தி ஏகாக்கிரத்தன்மை யடைகின்றது. அதஞல் ஆத்ம சொரூபம் அறியப்படும். ஆகையால் மந்த புத்தியுடையோர் சிரவண மனஞதிகளைப் பல முறையும் செய்தல் வேண்டும்.

**சீடன்:**—சிரவணுதிகளின் லட்சணம் என்ன?

**குரு:**— (1) சிரவணம் (கேட்டல்):—பிரஹ்மம் இரண்டாவதற்ற அத்துவைத வஸ்துவாம் எனக் கூறுவதே எல்லா வேத வாக்கியங்களின் அபிப்பிராயமாம் என்பதைப் பல யுக்திகளால் நிச்சயிப்பதே சிரவணமாம்.

(2) மனனம் (சிந்தித்தல்):—வேதாந்த வாக்கியங்களால் கேட்கப்பட்ட ஆத்ம சொரூபத்தை வேதாந்த வாக்கியங்களுக்குச் சாதகமான யுத்திகளால் சிந்திப்பதே மனனமாம்.

நிதித்தியாசனம் (தெளிதல்):—மகா வாக்கிய சிரவணத்திஞல் ஆத்ம சொரூபம் இன்னதன்மையின தென்றறிந்து, மனனத்திஞல் திடமுண்டான பிறகு அதற்கு விஜாதீயமான தேகேந்திரியாதி சமஸ்காரங்களை விடுத்து ஸஜாதீயமான ஆத்ம விருத்தியை தைல தாரைபோல் இடைவிடாது நிலைத்திருக்கச் செய்தலே நிதித்தியாசனமாம். (ஆத்ம சொரூபத்திற்கு சரீரேந்திரியாதி விருத்திகள் விஜாதீயவிருத்திக ளென்றும் ஆத்மாகார விருத்திக்கு அனுகுணமான விருத்திகள் ஸஜாதீய விருத்திகளென்றும் கூறப்படும்.)

**சீடன்:**—இச் சிரவணுதிகளை எதுவரையில் செய்யவேண்டும்.

**குரு:**—வேதாந்த வாக்கிய ரூபமான பிரமாணங்களினிடத்து சந்தேகம் நீங்கி நிச்சய புத்தி யுண்டாகும் வரையில் சிரவணம் அவசியமாம். எதுவரையில் பிரமேயமாகிய (பிரமாணத்தாலறியப்படுவது பிரமேயம்) ஆத்ம சொரூபத்தினிடத்தில் சந்தேகமிருக்கின்றதோ அதுவரையில் மனனம் அவசியமாம். (பிரமாணத்தினிடத்துள்ள சந்தேகம் பிரமாணகத சம்சயம்; இது சிரவணத்தால் நீங்கும். பிரமேயத்தினிடத்துள்ள சந்தேகம் பிரமேயகத சம்சயம்; இது மனனத்தால் நீங்கும்) தர்க்க யுக்திகளால் பிரபஞ்சம் மித்தையென நிச்சயிப்பினும் பிரஹ்ம சுபரோக்ஷ சாக்ஷாத்கார முண்டாகும் வரையில் பிரபஞ்சம் தோற்ருதிருப்பதின்று. ஆகலின் பிரஹ்மசுபரோக்ஷ சாக்ஷாத்கார முண்டாகி திருசியமாகிய பிரபஞ்சம் நசிக்கும் வரையில் நிதித்தியாசனமாகிய சமாதி அவசியமாம்.

(தொடரும்)

குனிந்த தலை நிமிராதவள்

மணமேடையில் பெண் குனிந்த தலை நிமிராமல் 'இந்தப் பூனையும் இந்தப் பாலைக் குடிக்குமா' என்பதுபோல் உட்கார்ந்திருக்கிருள். ஆனல் உண்மை வாழ்வைத் தொடங்கிய கொஞ்ச நாட்களுக்குப் பின் மத்தாப்சுந்தரியாகிவிடுகிருள்! வாழ்க்கையில் வளையல் வேண்டாம் கையை விட்டாற் போதும் என்ருகிவிடுகிறது.



# வைணவம்

## திருமங்கை ஆழ்வார் வைபவம்.

(488-ம் பக்கத் தொடர்ச்சி.)

திரிசிரபுரம், தேசீயக் கலாசாலைத் தமிழாசிரியர்
ஸ்ரீமுகம் வே. வரதராஜையங்கார் எழுதியது.

ஆலிநாடர், குமுதவல்லி மகிழ, பரமோத்தமமான பாகவதாராதனத்தைத் தினந்தினம் செய்தவண்ணம் சோழ மன்னருக்குத் தாம் செலுத்தற்குரிய திறைப் பொருளையும் அதன்பொருட்டே செலவிட்டு வருவாராயினர். ஒற்றர்வாயிலான் உற்றதுணர்ந்த அபயன் சினந்தெழுந்து, ஆலிநாடரிடம் கப்பப் பொருளைத் தப்பாமல் எவ்வாற்றானும்வாங்கி வருமாறு ஏவலாளரை விடுத்தனன். வந்த ஏவலாளர் பன்முறை காத்திருந்தும் ஆலிநாடர் அவர்கட்கு "இன்று, நாளை, காலை, நண்பகல்" என்று தவணைகள் கூறி, அங்ஙனம் குறித்த காலத்திலுங்கூடக் கொடாமல் காலம் நீட்டித்து வந்தார். அப்பால், அமைச்சர் முதலானோர் ஆலிநாடரிடம் பகுதிப் பொருளை உடனே வாங்குமாறு ஏவலாளரை நிர்ப்பந்தம் செய்ய அவர்கள் சிறிது கடுமையாகவே கேட்கலாயினர். ஆலிநாடர் ஆர்த்தெழுந்தார்; வந்த ஏவலாளரை எதிர்த்து வெருட்டி யடித்தார். அவர்கள் நேராகச்சென்று அரசன் முன்னிலையில் நிகழ்ந்த வனைத்தையும் கூறினர். சோழன் சினமிக்கவனாய்த் தனது படைத்தலைவனை யழைத்து, பரகாலரை கணப்போழ்தில தம்முன் கொண்டு வந்து நிறுத்துமாறு உத்தரவளித்தான். தானைத் தலைவன் தாழாது ஏகி, பரகாலரைச் சூழ்ந்து பிடிக்கத் தொடங்க, அவர் ஆடன்மா என்னும் தமது வாம்பரி மேலேறி, அநீகத்தோடு அவன்முன் நின்று போராடி, அவனைப் புறங்காட்டியோடச்செய்தார். இஃதறிந்த காவலன் கோபித்து, இரையைவேட்ட பெரும் புலிபோல் சீறிப் பகைவர்மேல் வந்தான். பரகாலர் தமது படைவலிமையால், சென்னி மன்னனின் முன்னிட்ட சேனையைத் தோற்கடித்துப் போர் புரிந்தார். அரசன் தோல்வியடையுந் தருவாயில் பரகாலர் தாம் அருள்மாரி யாதலால், மன்னனைக் கொல்லுதல் மாண்பாகா தெனக்கருதி, சிறிது பொழுது சண்டையை நிறுத்தினர்.

சூழ்ச்சியிலும், ராஜ தந்திரத்திலும் மிகுந்த சோழ வேந்தன், பரகாலரை நயத்தால் வென்றிடக் கருதி, இன்மொழி பேசிய வண்ணம் அருகே வந்து உறவாடி 'இயன்ற விரைவில் நீர் கப்பப் பொருளைச் செலுத்திவிடக்கடவீர்' என்றுரைத்து அவரைத் தந்திரமாய் மந்திரிவசமாக்கி விட்டுத் தனது தலைநகருக்கேகினன். அமைச்சர் மெல்ல ஆலிநாடரைப் பிடித்து, ஓர் கோயிலில் அவரை மூன்றுநாளளவும் சிறைப்படுத்தி வைத்தான். பரகாலர் அன்னாகாரமின்றி அக்கோயிலிலேயே மூன்றுநாள் பட்டினி கிடக்க, பாகவதாராதனத்தால் மகிழ்ந்த காஞ்சீபுரம் என்னுந் திருப்பதியின்கண் ணெழுந்தருளியுள்ள பேரருளாளப் பெருமாள் அவரது கனவிலே தோன்றி 'உமக்குவேண்டிய பொருளை அளிக்க உவந்தோம். வாரும்' என்று கடாக்ஷித்தருளினர். எம்மானது ஆணையை ஆலிநாடர் நம்பி ஆனந்தம்

மிகுந்தெழ, அவணிருந்த அமாத்தியனை நோக்கி "திருக் காஞ்சிபுரத்திலே நிதியுள்ளது; அவ்விடம் என்னோடு வருவீராயின் தருவன் யான் திறைப் பொருள்" என்றார். அமாத்தியன், இதனை அபயனுக்கு அறிவித்து அவனனுமதி பெற்று, தக்க படைவலிமையுடன் ஆலிநாடரைத் தப்பித்தோடாவாறு காவல் செய்து அழைத்துக்கொண்டு காஞ்சீபுரஞ் சென்றான்.

பரகாலர் பலவிடங்களிலுந் தேடிப் பணப்புதையலைக் காணாராகி 'பணமில்லாதவன் பிணமாத'லின் சோர்ந்து, மூர்ச்சித்து "எம்பெருமானே! என் செய்வேன் அடியேன்" என்றிரங்க, பக்தபராதீனனான வரதராஜன் மீண்டும் அவர் கனவிற்றோன்றி, முன்பு பிரமன் செய்த வேள்வியைத் தடுக்கத் திரைகொண்டெழுந்த சரஸ்வதி தேவியான வேகவதி நதிக்கரையில் நிதிக் குவியலிருந்த விடத்தைக் காண்பித்தருளினார். பரகாலர் பரிந்தேகிப் பணப் புதையலைக் கண்டெடுத்து, அரசருக்கு அளித்தற்குரிய பொருளைக் கொடுத்து எஞ்சியதைக் கொண்டுபோய் பாகவதாராதனத்தை நடத்தி வந்தார். இங்ஙனமாக, பரகாலரிடமிருந்து பகுதிப் பொருளைப் பெற்றுச்சென்ற அமைச்சன் அதனை அபயன் முன்னிலையிற் குவித்து நிகழ்ந்தவற்றைக் கூறினன். அதுகேட்ட சென்னி (சோழன்) அச்சமும் ஆச்சரியமு மடைந்து, பரகாலரை வரவழைத்து, தாம் அவரைப் பலவாறு துன்புறுத்தியதற்காக இரங்கி, பிழை பொருத்தருளுமாறு வேண்டி, 'நீண்டானே! கரியானே! நிமலா! வென்றரற்றினளாய் நின்று சோர்ந்த தீண்டாத கற்புடைய' திரௌபதிக்கு எம்பெருமானருளால் சேலை வளர்ந்ததுபோல, ஆலிநாடருக்கு அமோகமாக கிடைத்த இப்பொருளைப் பொருட்சாலையில் சேர்த்துவிடக் கூடாதென்று கருதி, பரகாலரை மூன்று நாட்களளவும் பட்டினியாகவைத்த தீவினை தீர்தற் பொருட்டு அப்பொருள் செலவாகுமளவும், பாகவதாராதனம் நடத்தி வந்தார்.

அப்பால் பரகாலர், எம்பெருமானளித்த நிதிக்குவியலில் அரசன் கைப் பற்றிச் செலவிட்டது போகத் தம்மிடம் இருந்த எஞ்சிய பொருளையும் தாமே பாகவதாராதனத்திற் செலவிட்டு, பிறகு கையிற் பொருளின்றி, வழிப் பறிக் கொள்ளை செய்து திரவியம் சேர்த்தாகிலும் பாகவத கைங்கரியத்தை நிறுத்தாமல் நடத்த உறுதி பூண்டார். நீர்மேல் நடப்பான், நிழலிலொதுங்குவான், தாளூதுவான் தோலாவழக்கன் எனும் நால்வரும் இவருக்குத் துணை வராயினர். பாதையிற் செல்வோரை யெல்லாம் பரகாலர் கொள்ளையடித்துப் பொருளீட்டி வந்து மட்டற்ற மகிழ்ச்சியுடன் மாலடியார்கட்கு அமுதளித்துத் தமது கைங்கர்யத்தை நடத்தி வரலாயினர்.

> "இழிந்த மாந்தர்கைப் பொருள்களும் இகபரத்தரசை
> கழிந்த யோகியர் கைப்பாடின் தூயவாய்க் களங்கம்
> ஒழிந்தவாறுபோல்"—என்கிறபடியும்,

> "பிறர்க்குதவி செய்யார் பெருஞ்செல்வம் வேறு
> பிறர்க்குதவி யாக்குபவர் பேறும்"—என்கிறபடியும்,

இவர் பிறர்பொருளை சற்பாத்திரத்திற் செலவிட்டனர். பரகாலரின் கொள்ளையிடு தொழிலாலீட்டப்படும் பொருளும் நற்காரியத்தின் பொருட்டே செலவிடப்படுகின்றமை கண்ட எம்பெருமான், இவரது செய்கையைத் தீவினையெனக் கொள்ளாது அறமெனவே அங்கீகாரம் பண்ணி, இவருக்கு விசேஷகடாக்ஷம் செய்தருளத் திருவுளம் பற்றினார். பற்றியவர் பர

காலர் தம்மை வழிபறி செய்யுமாறு அந்தண வடிவந்தாங்கி சர்வாலங்கிருத பூஷிதனுய் அழகிய மணவாளத் திருக்கோலம் பூண்டு பிராட்டியுடன் எழுந்தருளினுர். அவ்வமயம் திருமணக்கொல்லையில் அரச மரத்தினடியில் ஒளிந்து கொண்டிருந்த ஆலிநாடர் 'இன்று நமக்கு நல்ல வேட்டை கிடைத்ததென்று, தடி உடைவாளுடன் தமது துணைவர்கள் பின்னே வர எம்பெருமானைச் சூழ்ந்தார். எம்பெருமானும் தாழ்ந்து தம்மைத் துன்புறுத்தாது ஆடையாபரணங்களைக் கொள்ளுமாறு வேண்டிக்கொண்டார். அங்ஙனம் கொள்ளும்போது, மாயவன் தமது கால்விரல் மோதிரத்தைச் சிறிது இறுக்கியருள அதனைக் கழற்ற முடியாமல் பரகாலர் சுபாவகுணத்தாற் பல்லாற் கடித்து, அதனையும் விடாதபகரிக்கையில், அவரது வலிகண்ட எம்பெருமான் அவரை 'கலியன்' என்றழைத்தார். அதன்மேல், ஆலிநாடர் தாம் கொள்ளையிட்ட பொருளனைத்தையுஞ் சேர்த்துத் தூக்க, அம்மூட்டை பூமிக்குள் வேரோடியதுபோல் அசைக்கவும் முடியாமலிருக்கக் கண்டு, வெகுண்டு, 'தமது உடைவாளை உருவிக் காட்டி எம்பெருமானை நோக்கி, 'ஓய்! என்ன மந்திரம் செய்தீர்?' என்று பயமுறுத்த "பதிதுனி புரோசெ பட்டாபி ராமுனி" (పతితుని బ్రోచె పట్టాభి రాముని) என்ற ஸ்ரீ த்யாகராஜ சுவாமிகளின் கீர்த்தனப்படி, சர்வேஸ்வரன் ஆலிநாடரை அருகே யழைத்து, நான்மறைப்பொருளாய் பிறவித்துயரறுத்துப் பரமபதமளிக்கும் அஷ்டாக்ஷர மந்திரத்தை இவர் செவிக்கமுதாமாறு உபதேசித்து கருடாரூடனுய்த் திருமாமகளுடன் சேவை சாதித்தார்.

அஷ்டாக்ஷர மந்திரோபதேசம் பெற்றமையாலும், எம்பெருமானைச் சேவித்த பாக்கியத்தாலும், கால் விரல் மோதிரம் கழற்றியபோது ஆரணங்களும் தேடிக்காணு அடியிணைகளில் தமது முடிபட வாய்த்ததாலும் பரகாலரின் அறியாமை நீங்கிற்று; அருள்பெருகிற்று; தத்துவ ஞானச் சுடர் உதிக்கப் பெற்ருர். சர்வேஸ்வரனை பரிபூரணனுபவம் பண்ணி, அவ்வானந்த மேலீட்டை வெளியிடுவாராகி எம்பெருமானருளால், நாற்கவியும் பாடவல்ல திறமை யுடையவரானுர். "வாடினேன் வாடி வருந்தினேன்" என்று இருகை கூப்பிச் சேவித்துப் பாடத் தொடங்கி,

"குலந்தருஞ் செல்வந் தந்திடு மடியார் படுதுயராயினவெல்லா
நிலந்தரஞ்செய்யு நீள் விசும்பருளுமருளொடு பெருநிலமளிக்கும்
வலந்தரு மற்றுந் தந்திடும் பெற்ற தாயினுமாயின செய்யும்
நலந்தருஞ் சொல்லை நான் கண்டுகொண்டேன் நாராயணு !
[வென்னு நாமம்"

என்ற பாசுரத்தால் தமதனுபவத்தை மொழிந்து, சதுர் வேதங்கட்கும் வேதாங்கங்கள் ஆறு அமையப் பெற்றிருப்பதுபோல, அவ்வேதங்களின் உட்பொருள்களை அருளிச்செய்த நம்மாழ்வாரின் நான்கு திவ்யப் பிரபந்தங்கட்கும் ஆறங்கங்கள் அமையுமாறு பெரிய திருமொழி, திருக்குறுந்தாண்டகம், திருநெடுந்தாண்டகம், திருவெழுகூற்றிருக்கை, சிறியதிருமடல், பெரியதிருமடல் ஆகிய ஆறினையும் அருளிச் செய்தார். ஆலிநாடர் கலியனுகி 'திருமங்கையாழ்வார்' என்னுந்திவ்ய நாமமும் பெற்ருர்.

(தொடரும்.)

# சாந்தி நிகேதனம்.

(முருகன்)

மஹாகவி ரவீந்திரநாத தாகூர் ஸ்தாபனம் செய்து நடத்தி வரும் சாந்திநிகேதனத்தை நேரிற் கண்ணுற்ற ஸ்ரீ. ஜ. தானியேல் என்பார், அதைப்பற்றி ஒரு அழகிய வரலாற்றை ஒரு மலையாளப் பத்திரிகையில் வெளியிட்டிருக்கிறார். அதன் சாரத்தைக் கீழே தருகின்றேன்.

கல்கத்தாவிலிருந்து ஆறு மைல் தூரத்துக்கப்பால் ஸ்தாபனம் செய்யப் பெற்றிருக்கும் சாந்தி நிகேதனம் அல்லது விசுவபாரதி இந்தியாவில் மட்டுமல்ல—உலகத்திலேயே மிகவும் புகழ் பெற்ற ஒரு ஸ்தாபனம்.

கவிச் சக்கரவர்த்தி தாகூரின் விசாலச் சிந்தனைக்கும், தீர்க்க தரிசனத்துக்கும் இலக்காக அது ஊழி யுள்ளளவும் நிலவும் என்பதற்கு எட்டுணையும் ஐயமில்லை.

அத்தகைய பெருமை வாய்ந்த சாந்திநிகேதனத்தைப் பார்வை யிடும்படி நான் இரண்டு சிநேகிதர்களுடன் கல்கத்தாவிலிருந்து புறப்பட்டேன். வழி நெடுக நீர்வளம் நிலவளம் மிகுந்த நன்செய் புன்செய்களைக் கண்ணுற்று நாங்கள் ஆனந்த பரவசரானோம். பார்க்குமிடமெல்லாம் இயற்கைத் தேவி ஆநந்த நடனம் புரிவதுபோல் தோன்றிற்று. வழி மத்தியில் மேன்மை தங்கிய பர்துவான் மகாராஜாவின் தேசத்தைக் கடந்து நாங்கள் போகவேண்டியிருந்தது. பர்துவான் தேசம் இந்தியாவில், மதுரக்கனி வர்க்கங்களுக்குப் பேர்போனது. அதிரஸம் பொருந்திய கனிகள் செடி கொடிகளிலும் மரங்களிலும் கொத்துக் கொத்தாகத் தொங்குவதைக் கண்டதும் எங்கள் நாவில் நீர் ஊறிற்று. சாந்தி நிகேதனத்துக்குச் செல்பவர்கள், இ. ஐ. ஆர். ரெயில் பாதையிலுள்ள போல்பூர் ஸ்டேஷனில் இறங்கவேண்டும். நாங்கள் பகல் இரண்டு மணிக்கு அவ்விடம் சென்றோம்.

போல்பூர் ஸ்டேஷனிலிருந்து சாந்திநிகேதனத்திற்கு இரண்டு மைல் தூரம். எங்கள் விஜயத்தைப்பற்றி விசுவபாரதி நிருவாகிகளுக்கு முன்னரே செய்தி யனுப்பி யிருந்ததனால் சாந்திநிகேதனத்துக்குச் சொந்தமான மோட்டார்கார் எங்களுக்காக ஸ்டேஷனில் காத்துக்கொண்டு இருந்தது. நாங்கள் காரில் ஏறி இரண்டரை மணிக்கு நிகேதனத்தை அடைந்தோம். எங்களை வரவேற்பதற்கான ஏற்பாடுகள் எல்லாம் வெகு ஒழுங்காகச் செய்யப் பெற்றிருந்தன. சூரியன் அஸ்தமிக்கும் வரை நிகேதனத்தைச் சுற்றியுள்ள சோலைகளை நாங்கள் சுற்றிநோக்கினோம். அந்த சோலைகள் சுமார் 900 ஏக்கர் விஸ்தீரண முடையன. நிகேதனத்துக்கு மேற்கிலும் தெற்கிலும் விசாலமான அழகிய வயல்களும், வடக்கிலும் கிழக்கிலும் மேட்டுப் பாங்கான பூமிகளும் காணப்படுகின்றன.

### போதன முறை

ஆசிரமம் முழுதும் பல லதா கிரகங்களும், செடி கொடிகள் படர்ந்த குடிசைகளும் ஏராளமாக இருக்கின்றன. அவைகளுக்கு இடையிடையே பல கட்டிடங்களும் இருக்கின்றன. குருகுல முறையில் கல்வி கற்பிக்கும் பொருட்டே நமது கவிச் சக்கரவர்த்தி இந்த விசுவபாரதியை ஸ்தாபனம் செய்திருக்கிறார். இங்கே சுமார் 200 பேர் கல்வி பயின்று வருகிறார்கள். அவர்களில் 150 பேர் சிறுவர்கள்; 50 பேர் சிறுமிகள், ஹைஸ்கூல் வகுப்புகளில் ஆண்களும் பெண்களுமாக 150 பேரும் காலேஜ் வகுப்புகளில் 50 பேரும் படித்து வருகிறார்கள். பொதுக்கல்வி தவிர, சங்கீதம், ஸாகித்யம், சித்திரமெழுதுதல், கைத்தொழில்கள் முதலியனவும் போதிக்கப்படுகின்றன. சீனு, ஜாவா முதலிய தூர தேசங்களிலிருந்தும் பலர் இங்கு கல்வி பயில வந்திருக்கிறார்கள். திருவிதாங்கூர் சமஸ்தான வாசிகளான இரண்டு பேரும் இங்கே படித்து வருகிறார்கள்.

### ஒழுக்கமுறை

மாணவர்கள் எல்லோரும் காலை 5 மணிக்கு படுக்கை விட்டெழுந்து நித்தியக் கடன்களை முடித்து ஸ்நானம் செய்கிறார்கள். பின்னர் யாவரும் ஒரு இடத்தில் ஒருங்கு கூடிக் கடவுளை வழிபடுகிறார்கள். அப்பால் சிற்றுண்டி யருந்தி அவரவர் வகுப்புகளுக்குச் செல்லுகிறார்கள். வகுப்புகள் எல்லாம் அநேகமாக லதா கிரகங்களிலும், மரச்சுவடுகளிலும் நடத்தப்படுகின்றன. யாவரும் தரையிலே உட்கார்ந்து படிக்கிறார்கள். உட்காருவதற்கு ஒவ்வொருவர் வசமும் ஒரு விரிப்புத்துணியும் இருக்கிறது. அவர்கள் கல்வி கற்கும் முறையை நாங்கள் வெகுநேரம் உற்றுக் கவனித்தோம். மாணாக்கர்களெல்லோரும் வெகு சுதந்தரமாக ஆசிரியர்களுடன் வார்த்தை யாடுகிறார்கள். தத்தமக்குத் தோன்றும் சந்தேகங்களைத் தாராளமாக ஆசிரியர்களிடம் கேட்கிறார்கள். அச்சம், கூச்சம், அதிகாரம் என்பன அங்கே மருந்துக்கும் காணப்படுவதில்லை. மாணவர்கள் கேட்கும் கேள்விகளுக் கெல்லாம் ஆசிரியர்கள் சாந்தமாகவும் கருணையுடனும் விடையளிக்கிறார்கள்.

### ஆசிரியர்கள்

ஆசிரியர்களின் மிக்காரும் ஆக்ஸ்போர்டு சர்வ கலாசாலையில் பட்டம் பெற்றவர்களே. அவர்களும் மாணவர்கள் கூடவே வசித்து வருகிறார்கள். 11-மணிக்கு யாவரும் போஜனம் செய்யப் போகிறார்கள். பிற்பகலில் சில வகுப்புகளே நடைபெறுகின்றன. மற்ற மாணவர்கள் எல்லாம் மத்தியானத்துக்கு மேல் விளையாடிக்கொண்டிருக்கிறார்கள். இரவு 8-மணிக்கு இராச் சாப்பாடு நடக்கிறது. 9½ மணிவரையில் பாடங்களைப் படித்து அப்பால் மாணவர்கள் தூங்கப் போகிறார்கள். 9½ மணிக்கு மேல் ஒருவரும் படிக்கக்கூடாதென்று கட்டுப்பாடான ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

### உணவு

சாந்தி நிகேதனத்தில் காபி, தேனீர் முதலிய பானங்கள் கிடையா. சாப்பாட்டின்போது பருகுவதற்குப் பாலே வழங்கப்படுகிறது. நாங்கள் இராப் போஜனம் செய்த பிறகு அதிதிமந்திரத்தில் சென்று படுத்துக் கொண்டோம். இரண்டாம் நாள் இரவு மிஸஸ் ஸ்லேடு என்ற ஒரு ஐரோப்பிய மாது ஒரு பிரசங்கம் நடத்தினர். அமெரிக்காவில் தாம், மகாத்மாகாந்தியின் மகிமைகளைப்பற்றிக் கேட்டதாயும் அதனுல் மகாத்மாவைப் பார்க்கும் பொருட்டும் இந்தியர்களின் வாழ்க்கை முறைகளைக் கண்டறிவதற்காகவும் இந்தியாவுக்கு வந்ததாகவும் அம்மாது கூறினர். இந்தியர் வாழ்க்கை முறையைக் கண்டு வியப்படைந்த அந்த ஐரோப்பிய மாது, இப்பொழுது இந்தியப் பேர் பூண்டு இந்திய உடை உடுத்து சஞ்சரிக்கிறார்.

### நூல் நிலையம்

சாந்தி நிகேதன நூல் நிலயத்தில் உலகத்திலுள்ள எல்லா பாஷை நூல்களும் வைக்கப்பட்டிருக்கின்றன. நூல் நிலயத்தில் ஒரு ஆராய்ச்சி சாலேயும் ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது. பொருட் காட்சி சாலேயில் அநேக கல் வெட்டுகளும், பழைய நாணயங்களும் செப்பேடுகளும், படங்களும், கொத்து வேலே செய்த பல சாமான்களும் வைக்கப் பட்டிருக்கின்றன.

### கவிச்சக்கரவர்த்தி வாசஸ்தலம்

ஒரு பெரிய மரத்தின் உச்சியில் கவிச்சக்கரவர்த்தி இருப்பதற்கு ஆச்சிரமம் கட்டப்பட்டிருக்கிறது. அடிக்கடி தாகூர் அங்கே சென்று இருப்பதுண்டு. அவர் ஸ்திரமாக ஒரு இரண்டு மாடிக் கட்டிடத்தில் வசிக்கிறார். அவருடைய ஒரு மகனுக்கும் மகளுக்கும் தனித்தனி இரண்டு கட்டிடங்கள் கட்டப்பட்டிருக்கின்றன. மரத்தின் உச்சியிலுள்ள ஆச்சிரமத்திலிருந்து நாற்புறமும் பார்த்தால் இயற்கை வனத்தைப் பார்த்து ஆனந்த மடையலாம். அந்த ஆச்சிரமம் மஹாகவி தாகூரைப் போன்ற பெரும் புலவர்கள் வாசத்துக்கு முற்றிலும் பொருத்தமானதே.

சாந்தி நிகேதனம் இயற்கை வளம் மிகுந்த ஒரு வித்தியாலயம் என்பதற்குச் சந்தேகமே இல்லை. அதைக் கண்ணுற்றவர்கள் எல்லோரும் அவ்வாறே அபிப்பிராயப்படுகிறார்கள்.

### காந்தி தரிசனம்.

வீண்பேச்சுப் பேசாதீர்கள்! வீணுகப் பேசிப் பேசியே நாம் இந்த தரித்திர நிலேயை யடைந்தோம். கும்பலில் கோவிந்தா போடுகிறவர்கள் நமக்கு வேண்டுவதில்லை. ஒரு கதர்த் துணியை நாம் வாங்குவதால் ஏழு ஏழையின் ஒரு வேளைப் பசியை ஆற்றுகின்றேம் என்னும் உணர்ச்சி நமக்கு ஏற்படவேண்டும். கதரை உடுக்கவேண்டும்.

(காந்தியடிகள்.)

# ஆனந்த சந்திரோதயம்

S. V. V.

"குணம் செத்தால் போதும்; நபம் சுட்டால் போதும்" என்று நாம் சாதாரணமாகச் சொல்வதுண்டு. துஷ்டன் துறவியைப் போல வேஷம் போடுவான்; ஆகையால், கெட்ட குணத்தை மாற்றுவது எவராலும் எந்நாளும் ஆகாத காரியம். குடும்பி துறவியைப் போன்று காவியாடை யுடுக்கலாம். கையில் கமண்டலம் தண்டம் பவித்திரம் முதலியவற்றைக் கொள்ளலாம். ஆனல், சம்சார வாசனை அவனை விட்டு நீங்காது. தாரேஷணை, தனேஷணை, புத்திரேஷணைகளை அவன் விடவியலாது. துவைதம் அத்வைதம், விசிஷ்டாத்வைதம் ஆகிய மூன்று மதக் கோட்பாடுகளிலும் தனக்கு மிகுந்த நம்பிக்கையுண்டு என்று சொல்லிக் கேட்பவர்கள் நம்புமாறு இனிப்பாகப் பேசி விடலாம். சமயம் வாய்ப்பின், ஏதேனும் ஒன்றை மிகவும் உயர்த்தியே கூறவேண்டியதாகி விடும். இப்படி 'உள்ளொன்று வைத்துப் புறம் பொன்று பேசும் குணம்' அம்மனிதன் இம்மண்ணுலக வாழ்வை விட்டு நீங்குகிற வரையில் அவனை விடுகிறதில்லை. அதை மாற்றவும் முடிகிறதில்லை. என்ன தான் நன்மை செய்தாலும் தீய சுபாவ முடையவர்கள் நற்குண சீலர்களாகிறதில்லை. 'பன்னுகந்தனக் கமிர்தம் கொடுத்தாலும் விடமொழியப் பயன் கொடாதே' என்ருர் வில்லிபுத்தூரார் பாரதத்திலும். இதற்கு உதாரணமாக மகா பாரதத்தில் துரியோதனனை எடுத்துக் கொள்வோம். திருதராஷ்டிரன் அவனுக்கு எவ்வளவோ நீதிகளை எடுத்துக் கூறினன். பீஷ்மர் விதுரர் முதலான மகாத்மாக்களெல்லாம் எவ்வளவோ நீதிகளை அவனுக்கு எடுத்தோதினர்கள். பகவான் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவே நேரிற் சென்று,

> சூதினு லரசிழந்து நின்றுணைவர் சொன்ன சொல்லும் வழுவாதுபோய்
> ஏதிலார்களென நொந்து தண்ணிழலிலாத கானினிடை யெய்தியும்
> தீதிலாவகை குறித்த நாள் பல கழித்து வந்தனர் செகத்தினில்
> கோதிலாத குருகுலமகீப வவருரிமை நண்பொடு கொடுத்தியே.

என்று பலவாறு அவனை வேண்டியும் அவன் 'ஈ இருக்கும் இடமெனினும் இப்புவியில் யான் அவர்க்கு அரசு இனிக் கொடேன்.' என்று தானே கூறினன். கடைசியில் அவன் அடைந்த கதி யென்ன? அமர்க்களத்தில் மாண்டொழிந்து போனதை யன்றி செல்லுங்கால் நலன் ஏதேனும் கொண்டு போயினனு? இல்லை யல்லவா? இதனுல், 'துர்க்குணமுடையவர்களின் வாழ்வெல்லாம் என்றும் பகற்காலத் தில்லாமல் இருளிலேயே தொடங்கி இருளிலேயே ஒடுங்குகின்றது என்பதும்,' யார் எவ்வித மாகத்தான் முயற்சி செய்தாலும் பிறவிக் குணத்தை மாற்றுவது இயலாதென்பதும் பெறப்படுகின்றதன்றே? சற்குண சம்பன்னன் பகவத் கிருபைக்குப் பாத்திரனுகி, இகத்திற் புகழெய்தி சகல சுகங்களையும் அனுபவித்து பரத்தில் மோக்ஷத்தையும் அடைகின்றுன். அவன் வாழ் நாட்களில் சூர்யன் அஸ்தமிப்பதே இல்லை.

***

"எங்கும் நிறைகின்ற பொருளே" என்று பெரியோர் பகவானைப் போற்றுவார்கள். பரம்பொருளான சர்வேஸ்வரன் சர்வ வியாபியாயிருப்

பதால் நாம் அவரைப் பரிபூரணர் என்று துதிக்கின்றோம். இதை உலகி லுள்ள சகல விதமான மதஸ்தர்களும் ஒப்புக் கொள்கிறார்கள். ஆனால், கடவுளை எங்கும் நிறைந்தவரென்றால் எந்த விடத்திலும் அவர் தானே வியாபித்திருக்க வேண்டும். அவரைத் தவிர வேறெந்தப் பொருளும் இருக்க முடியாதல்லவா? ஒரு இடத்தில் ஒரே காலத்தில் ஒரு பொருள் தானே இருக்க முடியும்? அப்படியிருக்க மனிதர்களாகிய நாமென்ன, இன்னும் மற்ற ஜீவ ராசிகளென்ன, இவை யெல்லாம் இருக்கின்றனவே என்ற ஆசங்கை ஏற்படலாம். நாமும் ஏனைய ஜீவராசிகளும் உள்ள இடத்தில் பகவான் இல்லையென்றால் அவரது பரிபூரணத்துவத்திற்கு குறைவு ஏற்படுகிறது. இந்த ஆசங்கையை அத்வைதம் விளக்கமாகத் தீர்க்கிறது. அக் கொள்கைப்படி பிரம்மம் ஒன்றே உளது. "கரந்த சில்லிடந்தொறும் இடந்திகழ் பொருள் தொறும், கரந்தெங்கும் பரந்துளன்" என்கிறபடி அதுவே சகல லோகங்களிலும் நிறைந்து வியாபித்துள்ள வஸ்து. ஒரு மனிதன் நின்றுகொண்டிருக்கிறான்; அவனைச் சுற்றிப் பல நிலைக் கண்ணாடிகள் இருக்கின்றன. அக்கண்ணாடிகளனைத்திலும் அம்மனிதனுடைய ரூபம் பிரதிபிம்பிக்கின்றது. ஆனால் அந்த மனிதன் அக்கண்ணாடிகளில் இல்லை. அதுபோல உலகிற் காணப்படும் மற்ற பொருள்களனைத்தும் பிரம்மத்தின் பிரதி பிம்பமேயாகும். மாயையால் அஞ்ஞானிகளான நமக்குப் பிரம்மமானது சூர்யனாகவும், சந்திரன் நக்ஷத்திர கோளங்களாகவும், சேதனா சேதனப் பொருள்களாகவும் காணப்படுகின்றது. ஒருவன் இருட்டில் போகும்போது வழியிற் கிடக்கும் பழுதை அவனுக்குப் பாம்புபோலத் தோன்றி மனதைச் சலிக்கச் செய்துவிடும். அது பழுதை தான் என்றறிந்த வுடன் அவனுக்கிருந்த பயம் விலகுகின்றது. அதுவே மாயை. இந்த மாயை நீங்கிவிட்டாலோ 'அகம் பிரம்மாஸ்மி' என்று சந்நாஹம் பண்ணுகிறான். இந்த மாயை விலகவே பக்தர்கள் பகவானை புஷ்ப தீப தூபங்களால் ஆராதனம் செய்கிறார்கள்.

***

'கடவுளை நம்பினோர் கைவிடப்படார்' என்பது ஆன்றோரின் அமுத மொழி. இதற்கு உதாரணமாக ஒரு சிறு நிகழ்ச்சியை இங்கு எடுத்துக் கூறுவோம். ஸ்ரீமத் விவேகானந்த சுவாமிகள் இராஜபுதனத்தில் யாத்திரை செய்து கொண்டு வரும்பொழுது ஓர் அதிசய சம்பவம் நிகழ்ந்தது. அப்பொழுது கோடை காலமானதால் கொடிய பாலைவனங்களைக் கடந்து போவது அவருக்கு மிக்க சிரமமாகவே இருந்தது. சுவாமிகள் தாரிகட்டம் (Tarighat) 'ஜங்ஷனை' நோக்கி இரண்டாம் வகுப்பு வண்டியில் தமது அன்பர்கள் அளித்த 'டிக்கட்'டை எடுத்துக்கொண்டு பிரயாணம் செய்தார். வழியில் வெயிற் கொடுமையால் விடாய் தணிக்கத் தண்ணீர் கிடைக்காமல் வருந்தினார். இடை வழியிலுள்ள 'ஸ்டேஷன்'களில் குடி தண்ணீர் விற்கப்படுவதாயினும், இவரிடம் காவி யுடையும், கமண்டலமுந் தவிர வேறு ஒரு பைசாவும் இல்லாததால், தவித்த வாய்க்குத் தண்ணீர் கிடைக்காமல் கஷ்டப்பட்டார். அவருக்குப் பக்கத்திலுட்கார்ந்திருந்த தனிகரான அன்பரொருவர் துட்டு கொடுத்து தண்ணீர் வாங்கி, பருகிய வண்ணம் சுவாமிகளைப் பார்த்து, "நீங்கள் ஏன் வேலை செய்து பணம் சம்பாதிக்கலாகாது? பொருளில்லார்க்கு இவ்வுலக மில்லை யன்றோ? இப்பொழுது என்னிடம் பொருளிருந்தமையால் நான் நல்ல 'ஐஸ்' கலந்த தண்ணீரைப் பருக வியன்றது." என்று வழி யெல்லாம் கேலியாகப் பேசிக்கொண்டே வந்

தார். சுவாமிகள் மறுமொழி யொன்றும் புகலாது 'மௌனம்' சர்வார்த்த சாதகம்' என்று தரிகட்டத்தை யடைந்து, சிறிதும் இரக்கமின்றி தகிக்கும் வெய்யிலில், ஒரு சிறு ஓட்டுக் கட்டிடத்தின் வாயிலோரத்தில் தமது உத்த ரீயத்தை விரித்துச் சோர்ந்து உட்கார்ந்து கொண்டிருந்தார். அவர் சோற் றைக் கண்டோ இரண்டு நாட்களாயின. பசியோ படாத பாடு படுத்துகின் றது. இச்சமயம் அவருடன் யாத்திரை செய்து வந்த அவ்வன்பரும் தின் பண்டங்களை இன்பமாய்ப் புசித்து விட்டு, சுவாமிகளுக்கருகே வந்து தாம் பூலம் தரித்துக் கொண்டே பின்னும் கேலியாகப் பேசத் தொடங்கினர். அப்பொழுதும் சுவாமிகள் வெகுண்டாரில்லை. இங்ஙனமிருக்கும் போது மூன் பின்னறியா வேதிய ரொருவர், ஒரு பாத்திரத்தில் கறி, பலகார வகை கள், அன்னம் முதலியவற்றுடன் ஒரு செம்பில் தண்ணீரொடுத்துக்கொண்டு சுவாமிகளைத் தேடி வந்து முகமலர்ச்சியுடன் 'சுவாமி! உண்ண வாருங்கள், காயுங் கறியும் கற்கண்டும் பாயசமும் கொண்டு வந்தேன். ஆயாசம் நீங்க ஐயனே வாருங்கள்' என்றழைத்தார். சுவாமிகள், இவர் வேறு யாரையோ குறித்துத் தவறாக நம்மை அடையாளந் தெரியாமல் அழைக்கின்றார் போலும், என்றெண்ணி 'என்னையா அழைக்கின்றீர்கள்?' என, அவ்வேதி யர் "ஆம்! ஆம்! தங்களையே நான் அழைக்கின்றேன்." என்றார். சுவாமி கள் "என்னை எப்படி நீர் அறிவீர்?" என்று வினவ, அவர் "நேற்றிரவு கன வில் ஸ்ரீராம சந்திரமூர்த்தி எனக்குப் பிரசன்னமாகி, தாங்கள் இப்பொழுது அமர்ந்திருக்கும் இதே இடத்தைச் சுட்டிக் காட்டி, 'இன்று இதே வேளை யில் இங்கு உட்கார்ந்திருக்கும் சந்நியாசிக்கு அறுசுவை யுண்டி நீ அளித்தல் வேண்டும்' என்று கட்டளையிட்டு மறைந்தார். தம்மையும் இதே இடத்தில் இப்பொழுது அமர்ந்திருப்பது போலவே காட்டி யருளினர். அதனால் அமுது கொண்டு வந்தேன். நான் கனவிற்கண்ட துறவியும் நீரே தான். வாருங்கள்" என்று கட்டாயப்படுத்தி ஓர் நிழலின்கண் அழைத்துச் சென்று, ஆசனமிட்டு, அருந்த நீர் கொடுத்து வயிறார உணவளித்தார். 'ஆகா! என்ன பக்த வாத்ஸல்யம்.' என்று அறிவு வந்தவராய் ஐயனுடன் கேலியாகப் பேசிய அவ்வழிப் போக்கர் ஆச்சரியத்துடன் தலை குனிந்து வெட்கி யேகினர். 'கடவுளை நம்பினோர் கைவிடப்படார்' என்பதை அனுபவ பூர்வமாய் அடைந்த சுவாமிகளும் பசி தீர உண்டு பரமானந்தபராயினர்.

## இடையில் வருகிறவனுக்கு இன்பம்.

ஒரு எச்சில் இலைக்கு இரண்டு நாய்கள் சண்டை யிட்டுக் கொண்டிருக்கும்போது மூன்றாவது நாயொன்று வந்து ஆற அமர தின்றுவிட்டுப் போகிறது. மனைவிக்கும் புருஷனுக்கும் சண்டை யேற்பட்டுவிட்டால மத்தியில் ஒருவன் வந்து இரு வருடைய விரோதத்தையும் பெருக்கி தான் லாப மடைகிறான். ஒரே இடத்தில் இரண்டு கடைக்காரர்கள் போட்டி போட்டால் வாங்குகிறவர்களுக்குப் பண்டங்கள் மலி வாகக் கிடைக்கின்றன. இடையில் வருபவனுக்கு மட்டும் இடங்கொடாமலிருந்தால் எத்தனையோ நன்மைகள் எளிதில் ஏற்பட்டுவிடும்.

# வறுமை.

B. இராமகிருஷ்ணய்யர்.

"கொடிது கொடிது வறுமை கொடிது" என்னும் நம் நாட்டு அனுபவ மொழியைக் கேளாதாரிலர். இவ்வறுமை யடைந்த மாந்தர்படும் பாட்டுக்கு அளவுமுண்டோ. இதனை வறுமைப்பிணி எனப் பெரியார் கூறியுள்ளதை நோக்குக.

> ஆடெரி படர்ந்த கோடியர் அடுப்பில்
> ஆம்பி பூப்பத் தேம்பசி யுழல
> இல்வி தூர்ந்த பொல்லா மார்பம்
> சுவைதொறும் சுவைதொறும் பால் காணாது
> குழவி தாய்முகநோக்க, தாயென்முக நோக்க
> நானுமுன்முக நோக்கி வந்தனன் குமணா!

இது, குமணச்சக்கரவர்த்தியை யண்மி தன் வறுமையைச் சிறிது தணித்துச் செல்ல வெண்ணிய வொரு பாவலர் கூற்று. மேற்சொன்ன பாவலர் கதியை யனுபவித்துவரும் மக்கள் நம் நாட்டில் ஏராளமாக உளர். அந்தோ! ஒரே வேளை, அதுவும் கால்வயிற்றுக்குக் கஞ்சியைப்பருகி, யாதொரு தொழிலும் புரியவியலாது தேகமெலிந்து இயமனை வலியவழைக்கும் மாந்தர் நிலையும், திரைகட லோடித்திரிந்து பிறநாட்டில் புகுந்து மேம்பாடுற்றவராது செருப்புதைக்கும், பிரம் படிக்கும், உயிர் வதைக்கும் இலக்காகி அரைவயிறுண்டு உடல் மெலிந்து வெறுங்கையராய் நாடுதிரும்பும் கூலியாளர் கதியும், பெற்றோர் வருந்தித் தேடிவைத்த சிறு திரவியத்தைச் செலவு செய்து ஆங்கிலத்தைச் சிறிது கற்று சர்க்கார் வாயில்கள்தோறும் காத்திருந்து நான்கு வருஷங்கள் காயமில்லா வேலையும் பின் மாதம் 35 ரூபா வருவாயில் குமாஸ்தாவாக அமர்ந்து மாதத்தின் முதல் தேதி யன்று (சம்பளம் பெறும்நாள்) மட்டும் வறுமை விலகி மறுநாள் முதல் படும்பாடும், கூற அனந்தனுலுந்தான் ஆமோ? மேற்சொன்ன மூவினத்தாரிலும் மிக்க வறுமையை யனுபவிக்கும் நான் என்னென்று கூறுவேன் என் நிலையை. அம்மம்மா—மாந்தர்காள்! மறந்தும் மறவாதீர்! பிறந்தும் ஆசிரியர் தொழிலிற் புகாதீர்! புகினும் தாலுகா போர்டு உத்தியோகம் நாடாதீர்! முன் ஏழ் பிறப்பிற் செய்தபாபத்தை யனுபவிக்கவே தாலுகா போர்டு ஆசிரியராவது போலும்—இன்னவர்க்குக் கடன் கொடுப்பார் கிடையாது. கொடுத்தாலும் அக்கடனை வசூலிக்க உலகம் தோன்றியமுதல் என்னென்ன முறைகளுண்டோ அவையாவையும் பிரயோகிப்பர். தாலுகா போர்டாரோ மூன்று மாதத்துக்கு ஒருமுறை சம்பளம் அனுப்புவர். இதற்குள் ஆசிரியர் நாலூர் மாற்றப்பட்டு அங்கிங்கெனாதபடி என நாலூரில் (தொங்கல்) இிற்பர். அல்லது ஐந்தாவது ஊர் வந்து சேரினும் சேர்வர். அந்தோ ஏற்பது இகழ்ச்சி எனினும் இவ்வாசிரியர் கதியினும் அது இகழ்ச்சியாமோ?

நிற்க, இவ்வாறு வறுமையோ நம் நாட்டில் பெரும்பாலான மக்களைப் பீடித்து நிற்கின்றது. ஆதலின் அதன் கொடுமையை நினைந்து மனம் வருந்தி நொந்து புண்பட்டு, நீரில் விழுந்து நீந்தவறியாது தத்தளித்து உயிர்.

விடும் விட்டிலைப்போல் ஆவது என்ன பயன். மனோதைரியம் குன்றாமல் அவ்வறுமைக் கடலில் நீந்திக் கரை யேறுவதன்றோ ஆண்மை.

அடுக்கி வரினும் அழிவிலான் உற்ற
இடுக்கண் இடுக்கண் படும்—(குறள்)

என்றும்,

இடும்பைக் கிடும்பைபடுப்பர், இடும்பைக்
கிடும்பை படாஅ தவர்—(குறள்)

என்னும் திருவாக்குகளைக் கண்டுணர்ந்து அவ்வறுமையே இனிவரும் நன்மைக்கு ஏதுவாகும் எனக்கொண்டு தேறுதலடைய வேண்டும்.

உடைமையும் வறுமையும் ஒருவழி நில்லா—அத்தகைய நிலையில்லா வறுமைக்கு-ஓரிடத்தும் தரித்து இரோம் என்னும் தரித்திரத்துக்கு, பயந்து வாழ்வது மதியீனமாகும்.

மேனாட்டுச் சரித்திரத்தை நோக்குங்கால் வெகு உன்னத பதவிக்கு வந்துளோர் அநேகர், இளமையில் மிகுந்த வறிய நிலையிலிருந்தே தங்கள் மனோதிடத்தாலும் விடாமுயற்சியாலும் மஹோன்னத பதவியைப் பெற்றுளார்.

'Tis a Common Proof that
Lowliness is young ambition's ladder—

என்னும் கவிச்சக்கிரவர்த்தி ஷேக்ஸ்பியர்கூற்றின் உண்மையை நோக்குக.

Poverty is the sixth sense—வறுமையே மனிதரின் ஆறுவது புலன் என்னும் ஜெர்மன் பழமொழி யொன்றுண்டு. தரித்திரத்தால் நாம் அடையும் நற்பழக்கங்கள் நம் பிற்கால நல்வாழ்வுக்கு உதவியாகின்றன.

மேனாட்டு வர்த்தகர் ஒருவர் தம்மிடம் வேலை பார்த்துவரும் இந்திய குமாஸ்தாவைக் கண்ணுறுந் தோறும் பேருவகைகொண்டு அன்னவாது உழைப்பின் திறத்தால் தாம் பெற்றுவரும் பெரும்ஊதியத்தை நினைந்து உடலம் பூரித்து, ஓர்நாள் அக்குமஸ்தாவை யண்மி, என் அருமைக் குமாஸ்தாவே! உம்முடைய திறமையும் ஊக்கமும பொறுமையும் சிகரற்று விளங்குகின்றனவே! நீர் எந்தப் பள்ளியிற் படித்தீர்? என்று வினவ, அன்னவர், பிரபுவே! நான் அநேகம் ஸ்கூல்களில் கற்றேன். ஆனால் நான் அதிககாலம் படித்ததும் மிகுதியாகக் கற்றதும் வறுமை என்னும் பள்ளிக்கூடத்தில்தான் என்று மொழிந்தனராம்.

ஆ! வறுமை சிறிது நன்மையையும் அளிக்கின்றது. இதனாலன்றோ,

Early adversity is often a blessing

என்றார் ஓர் ஆங்கிலப் பெரியார்.

மேலும் வறுமையானது தெய்வபக்தியை வளரச்செய்யும் சாதனங்களில் நிகரற்றதொன்று. இதனைக் கீழ்வரும் பெரியாரது திருவாக்கே தெளிவாக்கும்.

'வரமொன் றிங்கெனக் கருளல்வேண்டும், அதுவே
பெருங்குளிர்க் குடைந்த காலைக் கருந்துணி
பலதொடுத் திசைத்த வொருதுணி யல்லது
பிறிதொன்று கிடையா தாக, மறுமனைக்
கடைப்புறத் திண்ணை யல்லது கிடைக்கைக்
கிடம்பிறி தில்லை யாக கடும்பசிக்கு

உப்பின் றிட்ட புற்கையூ ணல்லது
மற்றோ ருண்டி வாய்விட் டாற்றினும்
ஈகுந ரில்லை யாகநா ளுளும்
ஒழுக்க நிறைந்த விழுப்பெருங் கேள்வி
மெய்த்தவர் குழாத்தொடும் வைகவித்திறம்
உடல்நீங் களவு மூதவிக் கடவுள்நின்
பெரும்பத மன்றியான் பிறிதொன்
றிரந்தனன் வேண்டினும் ஈந்திடாததுவே '

ஆதலின் வருமைக்கஞ்சி யுண்டுழலும் மாந்தர்காள்!
இனிவறுமைக்கு அஞ்சிஉண்டு உழலாதீர்!

('From Log-Cabin to White House') குடிசையிற் பிறந்து அரசை யடைந்த பல பெரியாரை நவீனநாகரீக மிலங்கும் அமெரிக்கா பெற்றுளது. நம் பாரதநாட்டிலும் அத்தகைய பெரியார் பலர் தோன்றியுளார். அவரது சரித்திரங்கள் வறுமைப் பிணியாளர்க்குச் சிறந்த சஞ்சீவியாகு மென்பதிற் றடையு முண்டோ.

ஒரு எளியவிதவை 'ஒஹியோ' (Ohio) நகரத்து காடுகளில் தன் பதினெட்டு மாதக் குழந்தையை வைத்துக்கொண்டு ஆ! நாம் எவ்விதம் இக்குழந்தையைக் காட்டு மிருகங்கள் மத்தியில் காப்பாற்றப் போகிறோம் என்று ஏங்கியிருந்தார். சில நாட்களில் அச்சிறுவன் மரங்கள் வெட்டி நிலந்திருத்திப் பயிரிடுவதில் தன் தாய்க்கு உதவிசெய்து கொண்டே வந்தான். நண்பர்களிடம் புஸ்தகங்கள் வாங்கிவந்து (தான் விலை கொடுத்து வாங்க இயலாத வறியன்) தன் ஓய்வு நேரங்களில் சிறிது சிறிதாகப்படித்து அவற்றைத் திரும்பக் கொடுத்து விடுவான். 16-வது வயதில் பொதிக்கழுதைகளை ஓட்டிச் சிறிது ஊதியம் பெற்றுத் தாய்க்கிட்டான். படிப்பில் ஆவல்மிகவே இவன் ஓர் கலாசாலையில் மணியடிக்கும் வேலை ஏற்றுக்கொண்டு அதில்வரும் வருமானத்தை அப்பள்ளியிலேயே தான் கல்விபயிலச செலவுசெய்து கற்றுவந்தான். வகுப்புகள் மேலுறவே, இவன் இரவு நேரங்களிலும் ரஜாநாட்களிலும் தச்சுத் தொழிலாளருக்கு உதவி செய்து மரம் அறுத்தும் மற்றும் ஊழியம் செய்தும் பெற்றுவந்த பொருளையும் தன் படிப்புக்காக்கினன். இவ்வாறுஇவர் உவில்லியம் காலேஜில் பட்டம் பெற்றார். 26-வது வயதில் செனட் சபைக்குட் புகுந்தார். 33-வது வயதில் காங்கிரஸ் சபைக்குட் சென்றார். 27-வருஷங்களில் இப்பெரியார் 'அமெரிக்கா ஐக்கியமாகாணத்தின் தலைவரானார்.' இவரே ஜேம்ஸ் ஏ கார்பீல்ட் ('James A Garfield') என்பார்.

நீராவி யந்திர நிபுணரான ஜேம்ஸ் வாட் என்பவர் சாஸ்திர ஆராய்ச்சிக்குரிய சாதனங்கள் ஏதுமில்லாத ஏழையாயிருந்தும் தமக்குக் கிடைத்த கெட்டில், அதன் மூடி முதலியவற்றைக்கொண்டு அடுப்பில் கொதித்தெழும் நீராவியோடு விளையாடி பிற்காலத்தில் உலகில் அழியாப்புகழ் எய்தினர்.

ஆதலின் சகோதர சகோதரிகளே! வறுமையால் ஏக்கங்கொண்டு நாம் உலகில் ஒன்றுக்கும் உதவவல்லோ மல்லேம் என்று வாளா இருத்தல் கூடாது. எவ்வித முயற்சியாலாவது முன்னேறுங்க முற்படவேண்டும். 'I wasted time and now doth Time waste me' என்று ஷேக்ஸ்பியர் கூறுவதற் கிணங்க நேரத்தை வீணேகழித்துத் திரியும் பேதையரைத்தேற்றி உய்விப்பது அறிவுடையோர் கடமையாகும்.

# இந்திய பசு பரிபாலனம்

S. V. V.

(594-ம் பக்கத் தொடர்ச்சி)

## பசு விருத்தி

**பசுக்களின் சீரழிவு :** இந்தியப் பசு வர்க்கங்கள் விருத்தியடையாமல் நாளுக்கு நாள் சீரழிந்து வருவதைக் கண்டு, அவற்ருல் விளேயும் பெரும் பயனே உணர்ந்த விவசாய விர்ப்பனர்களும், பசு பரிபாலன சங்கத்தார்களும் கொஞ்ச காலமாக விழிப்படைந்து விட்டார்கள். சாத்யமான வழிகளில் பசுவிருத்தியைச் சீர்திருத்த அவர்கள் ஆலோசனே கூறி வருகிருர்கள். அதனுல் நன்மையும் ஏற்பட்டுள்ளது. இவ்விதம் பசுவிருத்தி சீர்கேடடைந்ததற்குக் காரணங்கள் இவை யென்றும் அவர்கள் குறிப்பிட்டிருக்கின்ருர்கள். அவை, 1. மாடுகளுக்கு ஆகாரம் சரிவரப் போதிய அளவு கொடுக்கப்படாமை 2. நல்ல மேய்ச்சல் நிலங்களின்மை 3. அளவுக்கு மேல் அவற்றை உழைக்கச் செய்தல், வயதடையா முன்னரே ஏரில் பூட்டுதல், பார வண்டிகளே இழுக்கச் செய்து துன்பறுத்தல் 4. இளமையிலேயே கருப்ப முற்றுக் கன்றுபோட வைத்தல் 5. நல்ல எருதுகளின் சம்பந்தமின்மை 6. கன்றுகட்குப் பாலே விடாமல் இரக்கமின்றிக் கறந்து விடுதல் முதலியன. இக்குற்றங்களேப் போக்கும் பொருட்டு இந்தியாவில் அநேக இடங்களில், நன்ருக போஷிக்கப் பெற்ற பசு எருது கன்று முதலியவற்றிற்கு, மிருகக் காட்சிகளில் ஆண்டுதோறும் வெகுமதி கொடுப்பதென்று ஏற்பாடு செய்யப் பெற்று நடந்து வருகிறது. இதனுல் பொதுவாகச் சில நன்மைகள் ஏற்பட்டுள்ளன.

**பசு விருத்தியிலுள்ள சிரமங்கள் :** இந்தியாவின் அநேக பாகங்களில் பசு விருத்தியைச் சீர்திருத்துவதற்குப் பலவிதமான அசெளகரியங்கள் இருக்கின்றன. யதேச்சையாக வயிருர மேயப் புற்றரைகளின்றி, தாபாக்கினியாக வெயில் காய்கின்ற கோடை காலங்களில் கன்றுகளும், பசுக்களும் உணவின்றி பரிதபிக்கின்றன. வண்டி யிழுத்தல் முதலான தொழில்களுக்கு இன்றியமையாத எருதுகள் மட்டும் சிறிது கவனமுடன் போஷிக்கப்படுகின்றன. சேருங் காளேகள் சரிவர போஷிக்கப்படாமை மற்ரெரு பெருங் குறை. முக்கியமாகச் சில உயர்ந்த கோவர்க்கங்கள் மட்டும் விசேஷ சிரத்தையுடன் வளர்க்கப்படுகின்றன. விவசாய அபிவிருத்திக்கு ஏற்ருற்போல், அப்பசு மந்தைகளும் பெருகி வருகின்றன. விவசாயம் எவ்வளவுக் கெவ்வளவு மேன்மை யடைகிறதோ அதற்கேற்ப பசு, எருது முதலியனவும் யதேச்சையாக இயற்கையான போஷணேயால் விருத்தி யடைகின்றன.

**நோய் வருவதன் காரணம் :** ஒரே நிலேயான வழக்கமின்றி, நினேத்த பொழுதெல்லாம் முறையின்றி ஒரு வகைக் காளேயை மற்ரெரு வகைப் பசுவுடன் சேரவிட்டு நல்ல விருத்தியை யுண்டாக்க வெண்ணி, ஜில்லா போர்டு முதலான ஸ்தாபனங்களின் வாயிலாக காளேகளேப் பரிமாறிப் பார்த்ததிலும் எவ்வித பலனும் ஏற்பட்டதாயில்லே. பலனுக்கு மாருக அவர்கள் செய்த பரீக்ஷையால் பல மாட்டு நோய்கள் உண்டாயின. பசுவிற்குத் தக்க காளேகள் தேர்ந்தெடுக்கப்படாமையும், பொருந்தா சேர்க்கையும் பசுக்க

ளிடையே பல தீய நோய்களைப் பரவச் செய்கின்றன. சில நல்ல இனத்தைச் சேர்ந்த மாடுகளும் குன்றிக் கெட்டுப்போயின.

**அரசாங்க விருத்தி சாலைகள்:** நல்ல உயர்ந்த வர்க்கத்தைச் சேர்ந்ததும் தக்க போஷணையும் விருத்தியும் அடையாததுமான பசுவர்க்கங்களை அரசாங்க விருத்தி சாலைகளில் வைத்துப் போஷிக்க வேண்டுமென்று முடிவு செய்யப் பெற்றிருக்கிறது. அவை சுருசுருப்பாயும் திடமாயுமிருந்தாலும், தாழ்ந்தவையாயும் கூழையாயுமிருக்கின்றன. ஆதலால் அவற்றை அவ்வர்க்கத்திலுள்ள உயர்ந்த காளைகளைக் கொண்டே விருத்தி செய்ய வேண்டுவது அவசியமாயிருக்கிறது. இக்கருத்தைக் கொண்டு 'காளை வளர்ப்பு ரக்ஷண சாலைகள்' ஸ்தாபிக்கப்பெற்றன. இந்த சாலைகளில் பசுக்களும், காளைகளும் உயர்ந்த சுத்தமான வர்க்கத்திலிருந்து தேரப்பெற்று போஷித்து விருத்தியாக்கப்படுகின்றன. இதனால் இச்சாலைகளில் போஷணை யடைந்த காளைகளை வெளியே பல இடங்களிலுமுள்ள இதே வர்க்கப் பசுக்களிடையே சேர்த்து விருத்தியை யுண்டுபண்ணுகிறார்கள்.

**பசு வைத்தியம்:** பசு விருத்தி விஷயம் முழுவதும் பசு வைத்திய சாஸ்திர முறைகளை யொட்டிய சேர்க்கையைப் பொருத்திருக்கின்றது. ஏனெனில், பசு மந்தைகளைக் காத்து வளர்ப்பதில், நோய்கள் பரவாமலிருந்தால் மட்டுமே சுத்தமான சேர்க்கையும் தரமான வளர்ப்பு முடையனவாயிருக்கும்.

**சேர்க்கையில் சில புதிய அனுஷ்டானங்கள்:** தற்காலமுள்ள பசுவர்க்கங்களின் அபிவிருத்தி விஷய ஆராய்ச்சி வெகு காலமா யிருந்துவருகிறது. பசு, காளை ஆகிய இவற்றைச் சேர்க்கையின் பொருட்டு வளர்ப்பதற்கும், சேர்க்கைக்காகத் தேர்ந்தெடுப்பதற்கும் பசுக்களை அதிகமாக வளர்க்கும் சில பண்ணைக்காரர்களை முதல் முதலாகப் பழக்குவித்தல் நன்மையைத் தரும். முதலாகப் பசுக்களைப் பால் வளமுடையதாக்க வேண்டுமென்ற அவாவே இந்தியாவின் பல பசு பரிபாலகர்களிடத்தும் விசேஷமாயில்லை. ஏதோ அவை கொடுத்த வரையில் போதுமென்ற சிரத்தையின்மையே அதிகமாயிருக்கிறது. பால் கொடுப்பதற்கும் மூட்டு வேலைகளைச் செய்வதற்குமே நமது நாட்டில் பசுக்களும் எருதுகளும் அவசியமாக வேண்டியிருக்கின்றன. மாட்டிறைச்சி அல்லது கோமாம்சத்தை இந்தியர்களில் மிகவும் சொற்பத் தொகையினரே உபயோகப்படுத்துகின்றார்களாதலால், மாம்சத்தின் பொருட்டு மாடுகளை அமெரிக்கா, ஐரோப்பா தேசத்தாரைப் போன்று இந்தியர்கள் கொழுக்க வளர்ப்பதில்லை. எருதுகள் இந்தியாவில் உழவிற்காகவும், விருத்திக்காகவுமே போஷிக்கப்படுகின்றன. பசுக்களை நிரம்பப் பால் கொடுப்பனவைகளாக்குவதும் எருதுகளை நல்ல காளைகளாக்குவதுமே மாடுகளைப் பெருக்குவதன் முக்கிய நோக்கங்களா யிருத்தல் வேண்டும்.

சேர்க்கைக்குரிய காளைகளை மட்டும், கவனத்துடன் நல்ல வர்க்கத்திலிருந்தும், நிரம்பப் பால் கொடுக்கக்கூடிய வகையிலிருந்தும் தேர்ந்தெடுக்க வேண்டும். எந்தக் காளையின் தாய்ப் பசுவும், உடன்பிறந்த பசுங்கன்றுகளும் யதேஷ்டமாகப் பால் கொடுக்குந் தன்மை யுடையனவா யிருக்கின்றனவோ அவற்றைக் கவனித்தே பொருக்க வேண்டும். இதற்காக அயல் நாடுகளிலிருந்து கலப்பு வர்க்கக் காளைகளை வரவழைக்க வேண்டிய அவசியமே இல்லை. அரைகுறையாக இப்படியும் அப்படியும் விருத்திக்கு விடுவதால் அவை வியாதி

களுக்கு எளிதில் ஆளாவதோடு பலஹீனமாயுமிருக்கின்றன. இக்கலப்பு விருத்தியால் பசுக்கள் பால் அதிகமாகக் கொடுத்தாலும், இந்திய சுத்த சேர்க்கையால் விருத்தியான பசுக்கள் கொடுக்கும் பாலைப்போல புஷ்டியுள்ளதா யில்லை.

பால், தயிர், நெய் முதலிய பசுவின் சத்பதார்த்தங்களை விருத்தி செய்வதற்குக் கன்றுகள் இன்றியமையாதவை. சிறுகச் சிறுக, சேர்க்கையாலும், போஷணையாலும், கன்றுகளே ஆயர்களின் செல்வமாகின்றன. நல்ல போஷணையால் கன்றுகள் தேகாரோக்கியமும் உழைப்புக் கேற்ற திடசரீரமு முடையவை யாகின்றன. இப்படி நாளாவட்டத்தில் அந்த வர்க்கம் மேலானதாகி விடுகின்றது. பலவகையில் குடியானவர்களுக்கு அவை இன்றியமையா உதவிகளைச் செய்கின்றன.

அரசாங்கத்தின் உதவிபெற்ற கால்நடைப் பாதுகாப்பு மந்தைகள் சரியான வேலை திட்டத்துடன் சரியான போஷணை அடையும் வரையில் காக்கப் பட்டுவந்து இந்தியாவின் பாற்சாலை (ததிதாமம்)த் தொழிலை மிகவும் வெற்றியடையச் செய்துள்ளன. இந்நாளில் நூற்றுக்கு ஐந்து பசுக்கள் கூடச் சரியான பலனை அளிக்கக்கூடிய நிலையிலில்லை. பிரோஜ்பூரிலுள்ள கவர்ன்மென்ட் மிலிட்டரி பாரம் (Government Military Farm) என்னும் கால்நடை மந்தையின் வாயிலாக, நிரம்பப்பால் தரக்கூடிய கோவர்க்கத்திலிருந்து தேர்ந்து கொள்ளப்பெற்ற சில கோவர்க்கங்களைக் கொண்டு பாற்சாலைகளை எப்படி விருத்தி செய்யலாம் என்னும் விஷயத்தை நன்கு அறியலாம். இதேபோல இந்தியாவிலுள்ள சகல விதமான ஜாதிமாடுகளையும் ஏற்றவாறு விருத்தி செய்யவேண்டும்.

இதோடு ஐரோப்பாவிலுள்ள எல்லா ஜாதி காளைகளைக் கொண்டும், இந்திய கோவர்க்கங்களை 'விருத்திசெய்து பார்க்கலாம். ஹிசார், கோஸி மன்ட்கோமரி, சைவாள், சிந்து, முதலிய இந்திய கோவர்க்கங்களை பிரிசியன் (Friesian) மில்கிங் ஷார்ட் ஹார்ன்ஸ் (Milking Short-horns) பிரவுன் ஸ்விஸ் (Brown Swiss) அயர்ஷையர் (Ayrshire) குரான்ஸி (Guerense) முதலிய மேல்நாட்டு எருதுகளுடன் கலக்கச்செய்து எத்தகைய பலன் ஏற்படுகிறதென்று பார்த்து அதன்முடிவை ஆராய்ந்து, அதனால் விசேஷ பலன் ஏற்படுகிறதா என்று கவனிக்கவேண்டும். பால்சுரப்பிற்கும் நிலவளனுக்குமுள்ள சம்பந்தா சம்பந்தத்தை அறிந்த இந்தியர்களே கால்நடைகளைப்பற்றிய முடிவான அபிப்பிராயங் கொடுக்கத் தகுந்தவர்களாவர். தற்காலம் அரசாங்கத்தின் ஆதரவிலுள்ள கோவர்க்கங்களே மிகவும் உயர்ந்தவைகளா யிருக்கின்றன. (தொடரும்)

### நீ உன் வேலையைப் பார்

இரண்டுபேர் தெருவில் நின்று ஒருவரை யொருவர் பலமாக உரக்க நிந்தித்துச் சண்டை யிட்டுக்கொண்டிருந்தால் வழியில் போகிறவர்கள் கூட்டங்கூடி வேடிக்கை பார்க்கிறார்கள். அதுபோல எந்த விஷயத்திலும் கக்ஷிப் பிரதி கக்ஷிகள் இருந்தே தீரும். நீ உன் வேலையைவிட்டு வேடிக்கை பார்ப்பதில் பயனென்ன? உன் காரியத்திலேயே நீ கண்ணுயிரு.

# ஸ்ரீ பகவந் நாம வைபவம்.

மாந்தை-சா. கிருஷ்ணய்யர்.

(610-ம் பக்கத் தொடர்ச்சி)

நயவஞ்சக சித்தத்துடன் கூடியவர்களாயும், மகத்தான பாபஸம்பந்தமாய் சம்பாதித்த பொருள்களைக் கொண்டு வாழ்பவர்களாயும் ஸ்ரீபகவானின் ஆக்ஞாஸ்வரூபமாக வுள்ளதான சாஸ்திர விதி நிஷேதங்களை மீறி நடப்பவர்களாயு முள்ளவர்களுக்கு அப்பாப ஸம்பந்தத்தினின்றும் விடுபட மார்க்க முளதா வெனின்:—

"கலௌ கல்மஷ சித்தாநாம்
பாபத்ரவ்யோப ஜீவிநாம்|
விதிக்ரியா விஹீநாநாம்
கதிர் கோவிந்த கீர்த்தநாத்||"

"இக்கலியில் மகத்தான கபட எண்ணத்துடன் கூடியவர்களுக்கும் பஞ்சமஹா பாபங்களைச் செய்து அதனால் கிடைக்கும் திரவ்யத்தைக் கொண்டு வாழ்பவர்களுக்கும், சாஸ்திரவிதிகளைக் கடந்தவர்களுக்கும், (கதி யாதெனில்;) ஸ்ரீகோவிந்தநாம ஸங்கீர்த்தனமே கதியாகும்". அதாவது ஸ்ரீபகவந்நாம ஸ்வரூபமான,—ஸ்ரீபகவத் குணாதிசயங்களைப் புகழ்வதான, பாடல்களை உள்ளன்புடன் பாடி, ஸதா பகவந்நாம ஸ்மரணம் செய்து கொண்டிருந்தால், அவனது அற்புதக் கருணைகடாக்ஷத்தால் எப்பேர்க்கொத்த பாபமானாலும் சூரியனைக்கண்ட பனிபோல விலகி விடும்" என்பதாம்.

"கலேர்தோஷ நிதே ராஜந் நஸ்தி
ஹ்யேகோ மஹாந்குண꞉|
கீர்த்தநா தேவக்ருஷ்ணஸ்ய முக்த
பந்த꞉ பரம் வ்ரஜேத்||"

"மகத்தான தோஷங்கள் நிறைந்துள்ளதான இக்கலியில் ஒரே ஒரு நன்மை மட்டும் குன்றிலிட்ட தீபம்போல மிகவும் சிறந்து பிரகாசிக்கின்றது.

அது யாதெனில்,—திவ்யமங்களஸ்வரூபனான ஸ்ரீகிருஷ்ண பரமாத்மாவினுடைய உத்க்ருஷ்டமான திவ்ய நாமத்தை உச்சரித்தலாம். அதினாலேயே மானிடர்கள் ஸமஸ்தமான பந்தங்களி னின்றும் விடு பட்டுப் பரம பதத்தை யடையக்கூடும்"

காலசக்ரமோ சற்றேனும் நில்லாமல் ஓடிக்கொண்டே யிருக்கின்றது. சென்றகாலம் மீண்டும் வரப்போகின்ற தில்லை யென்பது திண்ணம். காலனோ காலத்தை யெதிர் பார்த் திருக்கின்றான். 'காற்றுள்ள போதே தூற்றிக் கொள்ள வேண்டும்' என்றபடி காற்றாகிய இச்சரீரம் இருக்கும்பொழுதே தூற்றலாகிய ஸ்ரீபகவந் நாமத்தை உச்சரித்து அவனது அருட்பாத கமலங்களை யடையமுயலவேண்டும்.

"காலக்ஷேபோ நகர்த்தவ்ய:
க்ஷீணமாயு: க்ஷணே க்ஷணே|
யமஸ்ய கருணா நாஸ்தி
கர்த்தவ்யம் ஹரி கீர்த்தநம்||

"(உனது) ஆயுளானது நிமிஷத்திற்கு நிமிஷம் தேய்ந்து கொண்டே வருகின்றது. யமனுக்கோ கிஞ்சிற்றும் கருணை என்பதே கிடையாது. ஆதலால் நீ வீண் பொழுது போக்காமல் ஸ்ரீபகவந் நாம வைபவ கீர்த்தனுதிகளைப் படனம் செய்".

"ஹரேர் நாமைவ நாமைவ
நாமைவ மம ஜீவநம்|
கலௌ நாஸ்த்யேவ நாஸ்த்யேவ
நாஸ்த்யேவ கதி ரன்யதா||"

"கலியில் ஸ்ரீபகவந் நாம ஸ்மரணந்தான் எனக்கு ஜீவனமாக வுள்ளது. அதுவே மிகச் சிறந்தது. உத்த மோத்தம மானது. அதைவிட்டால் கடைத்தேற வேறு உபாயமே கிடையாது. அப்படிக் கிருந்தாலும் ஸ்ரீ பகவந் நாம ஸ்மரணத்தைப் போன்று எக்காலத்திலும், எல்லோராலும், மிகச் சுலபமாக அவற்றை அனுஷ்டிப்ப தென்பது முடியாது. முக்காலும் சொல்லுகின்றேன். இதிற் கொஞ்ச மேனும் சந்தேகமே கிடையாது."

ஸ்ரீபகவானே கூறுகின்றார்:—

"விஸ்ராஜ்ய லஜ்ஜாம் யோதீதே
மந் நமாமி நிரந்தரம்|
குலகோடி ஸமாயுக்தோ
லபதே மாமகம் பதம்||

மனப்பூர்வமாய்,—உள்ளன்புடன் கூடி எவனொருவன் எனது நாமத்தைக் கொஞ்சமும் லஜ்ஜை யென்பதில்லாமல் உச்சரிக்கின்றானோ, அவனும் அவனது குலத்தோர்களும் என்றென்றும் அழியாத எனது பதத்தை யடைகின்றார்கள். இஃது உண்மை வாக்கே யாகும்.

"நாமஸங் கீர்த்தனமே
நல்லதோர் மார்க்கம்"

# விடாமுயற்சியும் தவமும்.

(B. இராமஸ்வாமி படையாச்சியார்.)

' முயற்சி திருவினையாக்கும் முயற்றின்மை
இன்மை புகுத்திவிடும். (குறள்)

முயற்சி செல்வத்தைக் கொடுக்கும்; அம்முயற்சி இல்லையேல் அவ்வின்மை தரித்திரத்தைக் கொடுக்கும் என்பது பொருள். இம்முயர்சியானது உலகத்திலுள்ள எல்லாருக்கும் இன்றியமையாதது. நாம் ஒரு காரியத்தில் முயற்சி எடுத்துக் கொள்ளும்போது முதற்கண் கருதவேண்டியது தக்கது இது தகாதது இது என்பதே. தன்பலத்தைக் கருதாமல் பரோபகாரமான முயற்சியில் தலையிடுவதே சிறந்ததாம். அதனால் அடையவேண்டும் பலனை அடையலாம். கடவுள் அக்காரியத்தை முட்டின்றி முடித்து வைத்து என்றும் அழியாத கீர்த்தியைத் தருவார். இப்படிஆராய்ந்து செய்யும் முயற்சியே பகுத்தறிவுள்ள மக்கட் குரியதாம்.

"தக்கவின்ன தகாதன வின்னவென்று
ஒக்க உன்னலராயின் உயர்ந்துள
மக்களும் விலங்கே மனுவின்னெறி
புக்கவேல் அவ்விலங்கும் புத்தேளிரே"

என்று கம்பர் சொல்லியுள்ள பாடல் இங்கு கவனிக்கத் தக்கதாம். "முயற்சியின் வாரா ஊதியம் உளவோ" என்றனர் ஆன்றோர். உலகத்தில் மக்களுக்கு சுகதுக்கங்களைக் கொடுத்து நிற்பதும் உயர்வு தாழ்வுகளை உண்டாக்குவதும், ஒருவனைக் கல்விமானாக்குவதும் கல்லாதவனாக்குவதும் பலசாலியாகச் செய்வதும் பலவீனனாக வைப்பதும் முறையே முயற்சியுடைமையும் அஃதின்மையுமே. விடாமுயற்சி யுடையார்க்கு எந்நலனும் கைகூடும். இம்முயற்சிக்குரிய தக்கவழி,

"கால மறிந்தாங் கிட மறிந்து செய்வினையின்
மூல மறிந்து விளைவறிந்து—மேலுந்தாம்
சூழ்வன சூழ்ந்து துணைமை வலிதெரிந்து
ஆள்வினை யாளப்படும்"

என்ற நீதி நூலின் கொள்கையே.

மற்றும் கொக்கையும் கூகையையும் காகத்தையும்போலும் காலத்தை முன்னிட்டே காரியத்தை முடித்துக்கொள்ள வேண்டும். காரியம் சித்திக்கும் வரையில் எடுத்துக்கொண்ட முயற்சியில்,

"மெய்வருத்தம் பாரார் பசி நோக்கார் கண் துஞ்சார்
எவ்வெவர் தீமையு மேற்கொள்ளார்—செவ்வி
அருமையும் பாரார் அவமதிப்புங் கொள்ளார்
கருமமே கண்ணாயினர்"

என்கிறபடி கண்ணுங்கருத்துமா யிருக்கவேண்டும்.

எக்கருமத்தையும் எளிதில் முடிப்பதற்கு இளமைப் பருவம் ஏற்றதாயினும் அறிவிற்சிறந்த அறிஞர்கள் சொன்ன ஆப்தவசனங்களையுங் கைக்கொள்ள வேண்டும். முயற்சியைக் கையாளுபவரை அது ஈசுவரனுடைய கிருபைக்கும் பாத்திரராக்குவதுடன் அதனாலுண்டாகும் இன்பம் என்றைக்கும் அழிவற்ற

தாகவும் பிறவிநோய்க்கும் மருந்தாகவும் தோன்றி, புல்லறிவைப் போக்கி நல்லறிவைத் தரும் சோம்பலைக்கொன்று பகுத்தறிவைக் கூராக்கும்; மறதியைப்போக்கி ஞாபக சக்தியை நிலைநிறுத்தும்; அச்சத்தை அகற்றி ஆண்மையைத் தரும்; மடத்தைக்கொன்று அறிவை விசாலப்படுத்தும்; தெய்வ நிந்தையைப் போக்கிப் பக்தியை அளிக்கும்; வீண் பெருமையை ஒழித்து விநயத்தை விருத்தி செய்யும்; பிறர் கூறும் நிந்தனைக்காக நாம் கிலேசப்படலாகாது; யார் எப்படி நிந்தித்தாலும் அதனை மௌனமாகப் பொறுத்துக்கொண்டு நம் விடாமுயற்சியைத் தளர விடக்கூடாது. நல்லதுக்கு நாற்பது இடையூறென்பர். புலவர் பெருமான் கம்பர் தாம்பாடிய தேனினுமினிய "ஸ்ரீமத் கம்பராமாயணத்தை" அரங்கேற்றத் துணிந்தபோது கட்டின வீட்டிற்கு நோட்டஞ் சொல்லும் நோட்டக்காரரால் எத்தனை தரம் துன்புற்றார். அப்படியிருந்தும் அன்னவர் எடுத்துக்கொண்ட விடாமுயற்சியால் கம்பர் புகழ் இந்நன்னிலமாகிய தென்னாட்டில் கற்ற கல்வியாளரால் "உயர் கம்பன் பிறந்த தமிழ்நாடு" என்று நாட்டுக்கே கம்பரை உதாரணமாக எடுத்துப் போற்றப்பட்டு வருகிறது. இது நிற்க,

முயற்சியால் ஒன்றும் அடையமுடியாது; எல்லாம் விதிப்படியே நடக்கும் என்றும், விதியே வலியதென்றும், மதியே வல்லது என்றும் பலர் விவாதங்கொண்டு மனம் போனவாறு பேசி ஒருவர்க்கொருவர் சண்டையிடுகிறார்கள்.

> "தெய்வத்தாலாகா தெனினும் முயற்சிதன்—
> மெய்வருந்தக் கூலிதரும்" (குறள்)

அதாவது ஊழ்வகையால் காரியம் முடியாவிடினும் முயற்சி உழைப்பிற்கேற்ற பலனைத் தரும் என்பதாம். இதனை,

> "ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவின்றித்
> தாழா துஞற்றுபவர்" (பொதுமறை)

என்பது வலியுறுத்தும்

பகீரதப் பிரயத்தனம் என்பதொரு பழமொழி. இதை யாவரும் எளிதில் உரைப்பதைக் காண்கிறோம். அதாவது, சூரிய குலத்தோன்றலாகிய பகீரதன் தன் முன்னோரால் பலமுறை முயன்று கொண்டுவர முடியாமல் விட்டுவிட்ட அக்கங்கையை, தன் விடாமுயற்சியால் பூமியிற் சொண்டுவந்து, தம்மூதாதைகள் நற்கதி அடையும்பொருட்டு கருமத்தை நிறைவேற்றினான். பகீரதன் கங்கையை பூமியிற் கொண்டுவந்தபடியால் கங்கை பாகீரதி என்று இவன் பெயராலேயே அழைக்கப்பட்டு வருகிறது. இதனால்தான் "பகீரதப் பிரயத்தனம்" என்று விடாமுயற்சிக்கு இவனையே உலகத்தார் உதாரணமாகக் கூறுகிறார்கள்.

முன்னோர்கள் தேடிவைத்த தந்தக் கட்டிலில் பட்டுமெத்தை மேல் சயனிப்பதிலும் தாம் தேடிய தாழம்பாயில் படுப்பது சிறந்தது என்று ஒரு பழமொழி யுண்டு. நம்மவர்கள் மனமுயற்சியே மிகப் பெரிதாக உடையவர்கள். முயற்சியில்லாதவர்கள் உலக உபகாரிகளாகார்கள். ஒருபொருளை நாம் கைப்பற்றப் பலமுறை முயன்றும் அதிகக் கஷ்டப்பட்டும் காரியம் கைகூடாவிடின் அப்போது நாம் ஊக்கம் குன்றிவிடக் கூடாது. அப்பொருளுக்கும் நமக்கும் தொடர்பு சம்பந்தம் இருந்தபடியால் தான் இவ்வளவு பிரயத்தனம்

படவேண்டி வந்தது என்று நம் மனோ முயற்சி குன்றாமல் உழைத்து வருவோமேயாகில் இறைவனருளால் இனிது காரியம் முடிவு பெறும். எவ்வளவு கஷ்டப்படுகிறோமோ அவ்வளவும் அப்பொருளால் சுகத்தைப் பன்மடங்கு பெறக்கூடும். பிறகு அந்த நன்மை நம்மை விட்டு நீங்குவதும் அசாத்தியமே.

---

## ஐய வினா.

சித்திரைத் திங்களில் வெளிப் போந்த நம்போதினியின் 542-ம் இதழில் பண்டித K. V. தேவராஜ சாஸ்திரிகள் அவர்கள் ஆகாரம் எனும் மகுடத்துடன் வரைந்துள்ள கட்டுரையைக் கண்ணுற்றபோது ஆங்காங்கே கீழ்க்கண்ட சிற்சில சந்தேகங்கள் புலனாயின. கீழ்க்கண்ட அவைகளை நம்போதினியின் வாயிலாக விளக்க வேண்டுகின்றேன்.

(4) நான்காவது பிரிவு முற்றும் சந்தேகத்திற்கு உரியதாயிருக்கிறது.

(5) ஏன் எப்பொழுதும் கிழக்குமுகமாக உட்கார்ந்து போஜனம் செய்யவேண்டும்?

(6) ஒரே வஸ்திரத்தைத் தரித்துக்கொண்டு ஏன் போஜனம் செய்யக்கூடாது?

மனைவி, சகோதரி, தாயார் இவர்களுக்கெதிரில் போஜனம் செய்தாலென்ன? பந்தியில் மற்றவர்களைவிட விரைவாக உண்டு எழுந்திருப்பதனால் உண்டாகும் தீங்கென்ன?

(7) ஸ்திரீகள் போஜனம் செய்த பிறகு மிகுதியான அன்னத்தைப் போஜனம் செய்வதனால் விளையும் கேடென்ன?

(8) நாம் உண்ணும் ஆகாரத்தில் நகமாவது, ரோமமாவது இருந்தால் அதை எடுத்துவிட்டு நெய்யைத் தொட்டு மறுபடியும் போஜனம் செய்வதின் தாத்பர்யம் என்ன? இராஜாவின் அன்னத்தையும், பெரிய சங்கங்களிலிடும் அன்னத்தையும், காசுக்காக ஹோட்டல்களில் வைத்திருக்கும் அன்னத்தையும், பசுபந்தம் முதலிய யாகங்களிலிடும் அன்னத்தையும், சீமந்தான்னத்தையும், தேகத்தில் சேர்ந்து தேகபலத்தையும், சூக்ஷ்ம புத்தியையும் விளைவிப்பதாயிருப்பின், ஏன் போஜனம் செய்யக்கூடாது?

V. C. நடராஜன்.

---

பசுமாடுகள் தண்ணீர் இல்லாமையால் உலர்ந்த சோளத்தட்டைத் தின்றுவிடுவதால், சில சமயங்களில் அவைகளுக்குச் சொக்கு ஏறி ரொம்பவும் கஷ்டப்படுவதுடன், ஒவ்வொரு வேளையில் அவைகளுக்குப் பிராண ஹானியும் நேரிடுகின்றது. அவ்வாறு சொக்கு ஏறிய பிராணிகளுக்கு, அதை நீக்கி, குணப்படுத்த ஏதாவது சிகிச்சையிருப்பின். அதை நமது "போதினி"யின் மூலம் அறிவிப்பின், அது பலருக்கு நன்மை தரக்கூடியதாயிருக்கும் என்று ஆனந்தபோதினி சந்தா நேயர் திரு M. V. ராமராவ் வினவுகின்றார். இதற்குத் தக்க சிகிச்சை தெரிந்தவர்கள் வெளியிடலாம்.

# நெப்போலியனது புத்திரன்
## அல்லது
# பிரஞ்சுக்காரர் வெறுத்த ராஜகுமாரன்

(ஆசிரியர், A. சுருளியாண்டி கௌட எழுதியது.)

கி. பி. 1811-ம் ஆண்டு மார்ச்சு மாதம் 20-ந்தேதி பிரஞ்சுக்காரருக்கு ஓர் சுபதினமாயிருந்தது. அன்று ஒரு நல்ல நேரத்தில், மகா தீரனும், ஒப்புயர்வற்ற பராக்கிரமசாலியும், கர்ம வீரனும், தனது வெற்றிப்பிரதாபத்தால் ஐரோப்பாவிலிருந்த வல்லரசுகளெல்லாம் கிடுகிடென நடுங்கச் செய்தவனுமாகிய "நெப்போலியச் சக்கரவர்த்தி" யினது இரண்டாம் பட்ட மஹிஷியான, ஆஸ்ட்ரியச் சக்கரவர்த்தியின் புதல்வி "மேரி லூயிஸ்" ஓர் ஆண் மகவைப் பெற்றெடுத்த சந்தோஷ சமாச்சாரம் பீரங்கித் தொனிகளினிடையே ஒலித்தது. உலகப் பிரசித்தனாகிய நெப்போலியனது புத்திரனாக, அதிரூபவானாகிய ஓர் ராஜகுமாரன் பிறந்தான் எனும் சங்கதியறிந்த பிரஞ்சு ராஜ்ஜிய வாசிகள் ஆனந்த சாகரத்தில் ஆழ்ந்தனர்.

பிரான்ஸிஸ் ஜோஸப் சார்லஸ் போனபார்ட்டி எனும் பெயருடன் விளங்கிய அந்த ராஜகுமாரன் தாய் தந்தையரது அளவற்ற அன்பிற்குப் பாத்திரனாயிருந்து, குழந்தையாயிருக்கும்போதே "ரோம் சக்ரவர்த்தி" (The King of Rome) என்ற பட்டப் பெயருடன் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து வந்தான். பிற்காலத்தில் ஓர் பெரிய சக்ரவர்த்தியாகத்தக்க புதல்வனைச் சகல ராஜோபசாரங்களுடன் மிகவும் உத்தமமான முறையில் வளர்ப்பதற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் நெப்போலியன் செய்தான். இரண்டரை வயதானவுடன், உச்சரிப்புச் சக்தி சரியாக வருமுன்பே அரசிளங்குமரனது வித்தியாப்பியாசம் ஆரம்பமாயிற்று.

1814-ம் ஆண்டில் சார்லஸ் போனபார்ட்டிக்கு மூன்று வயதாயிருக்கும்போது நெப்போலியன் ஓர் பெரும் சேனையோடு ரஷ்யாவின் மீது படையெடுத்துச் சென்று "மாஸ்கோ" (Mascow) பட்டணத்தில் நடந்த கடும் போரில் தோல்வியுற்றான். பின்பு, ஐரோப்பாவிலுள்ள வல்லரசுகளெல்லாம் ஒன்றுகூடி யோசித்து, முடிவில் நெப்போலியனை எதிர்த்தன. மீண்டும் நெப்போலியனுக்குத் தோல்வி நேர்ந்தது. அந்தச்சமயத்தில் "மேரி லூயிஸ்" தனது புதல்வனுடன் ஆஸ்ட்ரியாவுக்கு ஓடிவிட்டாள். அதன் பிறகு அருமந்த புத்திரனைக் கண்ணால் காண்பதற்கும் நெப்போலியனுக்குப் பாக்கியம் கிட்டவில்லை. சத்துருக்கள் நெப்போலியனை மத்திய தரைக்

கடலிலுள்ள "எல்பா" (Elba) எனும் தீவில் சிறை வைத்தனர். மேரி லூயிஸ் சக்ரவர்த்தினி ஸ்தானத்தை யிழந்து ஆஸ்ட்ரியாவிலே வசித்துவந்தாள். சார்லஸ் போனபார்ட்டிக்குச் சக்ரவர்த்தி எனும் பட்டமும் மறைந்தது.

1814-ம் ஆண்டிலே நெப்போலியன் எல்பா தீவினின்றும் எங்ஙனமோ வெளியேறிப் பிரான்ஸுக்கு வந்து இழந்த தனது ஸ்தானத்தை மீண்டும் கைப்பற்றினன். சார்லஸ் போனபார்ட்டி தனக்குப் பின் பிரான்சுக்குச் சக்ரவர்த்தியாவானென நெப்போலியன் நினைந்தான். ஆனல்

"ஒன்றை நினைக்கி னதுஒழிந்திட் டொன்றாகும்
அன்றியது வரினும் வந்தெய்தும்—ஒன்றை
நினையாது முன்வந்து நிற்பினும் நிற்கும்
எனையாளும் ஈசன் செயல்"

என்றவாறு, அவனென்று நினைக்கத் 'தெய்வ மொன்று நினைத்தது. ஈசன் திருவுளத்தை எவரே அறிவார்? சொற்ப காலத்திற்குள் மீண்டும் நேர்ந்த "வாட்டர்லூ" யுத்தத்தில் நெப்போலியன் தோல்வியுற்று "ஸெண்ட் ஹெலீனா" தீவிற்கு நாடு கடத்தப்பட்டான்.

பிறகு, மேரி லூயிஸ் ஓர் பிரபுவை மணஞ்செய்துகொண்டு புத்திரனையும் வெறுத்துத் தனியே விட்டு விட்டு ஆஸ்ட்ரியா ராஜ்ஜியத்தினின்றும் நீங்கினள். அன்னையின் பிரிவிற்குப்பின், ராஜகுமாரனது பிரஞ்சு பரிவாரங்களும் அவனது செவிலி (வளர்ப்பு)த் தாயும் அவனை வெறுத்தார்கள். தாய் தந்தையரைப் பிரிந்தமையாலும், ஆள்வதற்கு ராஜ்யமோ, அன்றித் தன்னை நேசிப்பதற்குப் பிரஜைகளோ இல்லாது போனமையாலும் நெப்போலியனது குமாரன் ஆஸ்ட்ரியச் சக்ரவர்த்தியின் பிரஜைகளுள் ஒருவன் எனும் நிலையில் வளர்ந்துவந்தான். தனது தந்தையின் வீரப்பிரதாபங்களைக் குறித்துக் கேட்பதிலும், விசாரிப்பதிலும் உள்ள சந்தோஷத்தைக் காட்டினும் அதிக சந்தோஷம் ராஜகுமாரன் சார்லஸ் போனபார்ட்டிக்கு வேறெதிலுமில்லை. சமர்த்தனெனினும் ஆதரவற்றவனும், நிர்ப்பாக்கியனுமாகிய ராஜகுமாரன் தனது பிதாவைப்போன்றே தானும் ஓர் சக்ரவர்த்தியாக வேண்டுமென்னும் அவாவால் தூண்டப்பெற்று ஆஸ்ட்ரிய சைன்யத்தில் ஓர் சாதாரண சிப்பாயாகச் சேர்ந்தான். ராணுவ உடை தரித்த தினமே, அவனது வாழ்நாளில் மிகவும் புனிதமானதினமென எண்ணிக் களிப்புற்றான். சைன்யத்திலிருந்த இதர ராணுவ வீரர்களெல்லோரும், நெப்போலியச் சக்ரவர்த்தியின் குமாரன் வெகு விரைவில் ஆஸ்ட்ரிய சேனை நாயகனாகிச் சத்துருக்களைச் சம்ஹாரம்செய்யும் ஓர் காலம் வரும் என வெகு ஆவலுடன் எதிர் நோக்கிக்கொண்டிருந்தனர். ஆனல் இறைவன் திருவுளம் வேறு விதமாயிருந்தது. 1832-ம் ஆண்டில் திடீரென்றுண்டான ஓர் நோயின் காரணமாகத் தனது இருபத்தொன்றாம் பிராயத்தில் சார்லஸ் போனபார்ட்டி உயிர் துறந்தான். அந்த வாலிப ராணுவ வீரனது அகால மரணத்தைக் குறித்து துக்கிப்பதற்கு ஆஸ்ட்ரிய ராஜ்யத்தில் மிகச்சில ஜனங்கள் மட்டுமே இருந்தனர். தங்களது அரசனும், பிரஞ்சு சைன்யத்தை ஜெயபேரிகையோடு ஐரோப்பா முழுதும் நடத்தியவனுமான நெப்போலியச் சக்ரவர்த்தியின் செல்வக் குமாரன் மரணமடைந்ததைப்பற்றி அனுதாபம் காட்டுதற்கு பிரான்ஸ் ராஜ்யத்தில் சில ஜனங்கள் மட்டுமே இருந்தனர் எனும் சங்கதி மிகவும் பரிதபிக்கத் தக்கதன்றோ?

---

குக்கிராமங்களிலும்

# பலத்த ஆஸ்திகப் பிரசாரம்

தலைவர்-வே. ஸ்ரீனிவாசம்.

## சோக்கம்பாளையம்.

(கோயமுத்தூர் ஜில்லா, அவிநாசி தாலூகா.)

இச்சிறிய கிராமத்தில் ஸ்தாபிக்கப்பட்டிருக்கும் "சத்வித்யா பயிற்சியாளர் சங்கம்" எனும் பெயர் வாய்ந்த சங்கத்தின் ஆரம்ப வயதின் நிறைவு விழா, நிகழும் சுக்லஹூ சித்திரைமீ 10-11ந் தேதிகளாகிய திங்கள் செவ்வாய்க் கிழமைகளில் (22-4-29, 23-4-1929) உதகமண்டலம் ஸ்ரீராமகிருஷ்ண ஆஸ்ரமத் தலைவர் ஸ்வாமி சித்பவானந்தர் அவர்களின் அரிய தலைமையின் கீழ் சிறப்புடன் கொண்டாடப்பெற்றது. இதற்கெனவே, உள்ளூர் விக்னேஸ்வரர் கோயிலைச்சார்ந்த முன் மைதானத்தில் பெரிய பந்தல் அமைக்கப்பட்டிருந்தது. பந்தலில் தற்காலத் தேவையை உணர்த்தக்கூடிய பலவித வாக்கியங்கள் அடங்கிய அநேக அட்டைகள் தொங்கவிடப்பட்டிருந்தன. அவைகளில் சில வருமாறு:—"கடவுள் 'நீ முஸ்லீமா, கிறிஸ்தவனா, பறையனா, அல்லது பிராம்மணனா?' என்று கேட்கமாட்டார்; ஆனால் 'உன் எண்ணமும் செய்கையும் எவ்வாறு இருந்தது' என்பதைத்தான் அவர் கவனிப்பார்." "எம் மதமும் சம்மதமே." "உண்மையான வீரர்கள்தான் மதத்தைச் சரியாக அனுஷ்டிக்க முடியும்." "நீ இந்த உலகிற்கு வந்த காரியம் என்ன என்பதை அறிவாயா?" "சத்சங்கம் சகல நலமும் தரும்." "ஹிந்து மனமும் முஸ்லீம் உடலும் தற்பொழுது நம் நாட்டுக்குத் தேவை." "தீண்டாமைப் பேயைத் துரத்தி அடியுங்கள்." "ஏழைகளும் எளியவர்களும் உன் கடவுளாயிருக்கட்டும்." "ஹிந்துக்களின் முக்கிய குறை அதைரியமும் தேக பல ஹீனமும்." "காலையும் மாலையும் கடவுளைத் தொழு." மேலும் கதரை வற்புறுத்தும் பல அச்சு வாக்கியங்களடங்கிய அட்டைகளும் காணப்பட்டன. திங்கள் கிழமை மாலை 5 மணிக்கு உள்ளூர் பஜனை கோஷ்டியாரால் கடவுள் வழிபாடு பாடப்பட்டு முடிந்ததும் விழா துவக்கமாயிற்று. இவ்வூரில் சுற்றுப்புறத்துள்ள பல கிராமங்களிலிருந்து அநேக ஜனங்கள் வந்திருந்தார்கள். பிறகு ஊரின் சார்பாகவும் சங்கத்தின் சார்பாகவும் விழாவின் தலைவருக்குப் படித்துக் கொடுக்கப்பெற்ற உபசார பத்திரத்தின் நகல் பின்வருமாறு:—

ஷை உபசார பத்திரத்தைத் தலைவர் ஸ்வீகரித்த பிற்பாடு சங்கத்தின் தலைவர், சங்க முதலாண்டு அறிக்கையைப் படித்தார். பின், அக்ராசனப் பிரசங்கம் முடிந்ததும் கோயமுத்தூரைச் சேர்ந்த பிரமுகர்களில் ஒருவரும் ஸ்ரீராமகிருஷ்ண மிஷனில் விசேஷப் பற்றுள்ளவருமாகிய ஸ்ரீமான் T. S. அவிநாசிலிங்கம் அவர்கள், B. A., B. L., "சமய உணர்ச்சியை விருத்தி செய்வ

தெப்படி" எனும் விஷயமாய் ஓர் சொற்பொழிவு நிகழ்த்தினர். பிறகு மாலை $5\frac{1}{2}$ மணிமுதல் 9 மணிவரை ஒத்துப்பாலம் ஸ்ரீ நிரஞ்சன ஆஸ்ரமத்தைச் சேர்ந்தவரும், ஹிந்துமத கிரந்தங்களிலும், ஆராய்ச்சியிலும் சிறந்த புலமை உடையவருமான ஸ்வாமி ஆகமானந்தாஜீ, M. A., அவர்கள், "ஹிந்து மதத்தின் கருத்தும் கோட்பாடுகளும்" எனும் பொருள் பற்றிக் கூட்டத்தாரின் மனம் கரைந்துருகும்படி, வேதம், ஹிந்து மதம் என்பவைகளைப் பற்றி விரிவாக ஆராய்ந்துவிட்டு, "கடவுள் மதம் ஆகியவைகள் கவனிக்கப் படத்தக்கவையல்ல;" "ஹிந்துமத சம்பந்தமான நூல்களெல்லாம் ஆரியர்களுக்கு மட்டில் சொந்தமான ஓர் பொய்யுரை" என்று தற்காலத்தில் கூறப்படும் பல கூற்றுக்களுக்குத் தக்க ஆதாரங்களுடன் விடை யிறுத்தார். "திராவிட ஆரிய" வேற்றுமை என்பது சுய நலமிகள் சிலரால் கட்டி விடப்பட்ட ஓர் போலிச்சரக்கு என்பதையும், விவகாரத்திற்காக அவ்விதமே உண்மையில், "ஆரியத் திராவிட" பாகுபாடு இருப்பதென வைத்துக் கொண்டாலும், வேதம் முதலிய ஹிந்துமத சம்பந்தமான நூல்கள், ஆரியர்களைவிட திராவிடர்களுக்குத் தான் விசேஷச் சொந்தம் என்பதை, அவர் பல உதாரணங்களுடன் விவரித்துக் கூறிய பான்மை கேட்டோர் மனதை எல்லாம் முற்றிலும் பரவசப்படுத்தியது. அன்னாரின் மதத் தேர்ச்சியையும், பிரசங்க வன்மையையும், வசீகர சக்தியையும் கவனிக்குமளவில், அவர் ஸ்வாமி விவேகானந்தரின் நிலைக்குக் கூடிய சீக்கிரம் வந்துவிடுவார் என்றே தோன்றுகிறது. ஹிந்துமத சம்பந்தமான குழப்பமான கருத்துகளும், ஐயங்களும் தோன்றி யிருக்கும் இடங்களில், ஷை ஸ்வாமி ஆகமானந்தாஜீ, M. A., அவர்களை வரவழைத்து அன்னாரின் அரிய மொழிகளைக் கேட்டல் மகத்தான நன்மையை விளைவிக்கும்.

இரண்டாவது நாளாகிய செவ்வாய்க்கிழமை காலையில், சிக்காரம் பாளையம் சிறந்த பொதுஜன ஊழியராகிய ஸ்ரீமான் நஞ்சப்பா அவர்கள் "சங்கங்களின் அவஸ்யமும், அதைப் பரிபாலிக்கும் முறையும்" எனும் விஷயமாய் நீண்டதோர் உபந்யாசம் செய்தார். மாலையில் ஷை சத்வித்யா பயிற்சியாளர் சங்கத் தலைவராகிய ஸ்ரீமான், வெ. ஸ்ரீனிவாசன் அவர்கள் "தீண்டாமை விலக்கு" என்பது பற்றியும், மேட்டுப்பாளையம் வித்யானந்த சபையைச் சேர்ந்த ஸ்ரீமான் குப்புசாமி செட்டியார் அவர்கள் "இல்லறம்" என்பது பற்றியும் பிரசங்கித்தார்கள். மாலை 6 மணிக்கு, அக்கிராசனர் அவர்கள், பின்னுரையாகப் பல அரிய புத்திமதிகளைக்கூறிய பிற்பாடு, வந்தனோபசாரங்களுடனும், பிரசாத விநியோகங்களுடனும் விழா இனிது முடிவுற்றது. விழாவிற்கென வந்திருந்தவர்களுக் கெல்லாம் தக்க சாப்பாடு வசதியும் இடவசதியும், வரவேற்புக் கமிட்டி அங்கத்தினர்களால் இலவசமாக அளிக்கப்பட்டன.

இவ்விழா மிக்க விமரிசையாகவும், சிறப்பான ஏற்பாடுகளுடனும், நடந்ததற்கு, உள்ளூரிலுள்ள இரண்டு பங்கு சொந்தக்காரர்களும் ஏற்படும் செலவில் பாதியைக் கொடுக்க இசைந்ததும், ஷை சங்கத்தின் காரியதரிசியாகிய ஸ்ரீமான் இ. சி. ஆறுவசெட்டியார் அவர்கள் மிக்க பொறுப்பு ஏற்றுக் கொண்டதும் தான் காரணமாகும். பிரஸ்தாப சங்கத்தின் அங்கத்தினர்களுக்கு, அங்கத்தினரல்லாதவர்களாகிய பல அன்பர்களும் விசேஷ ஊக்கமும் சிரமமும் எடுத்துக்கொண்டு பொருளுதவியும் செய்து விழாவிற்கு உதவி புரிந்தது இங்கு குறிப்பிடத்தக்கது.

# சிறு விஷயங்கள்.

M. V. ராமராவ்.

சாதாரணமாக சில விஷயங்களை நாம் கேவலமாக எண்ணி, அலக்ஷியமாய் கவனிக்காமல் விட்டுக்கொண்டு வருகிறோமன்றோ? அதற்குக் காரணம் "என்ன, இது ஒரு சிறு விஷயம், பாதகமில்லை" என்பதே யாகும். உற்றுநோக்குங்கால் இச்சிறு விஷயங்களைக் கவனிப்பதில் அநேக உபயோகங்கள் உண்டு. விஷயம் பயனற்றதாகத் தோன்றினும், அதைக் கவனிக்காமல் விடுவதினால் சில சமயங்களில் கஷ்டமும், தீமையும் ஏற்படுவதும் பார்த்து வருகிறோம். ஆதலின் அவைகளை ஒருவாறு கவனிப்பது சாலவும் நன்மையே பயக்கும்.

கீழ்க்காணும் சில விஷயங்களைக் கவனிப்பின், அவைகளின் பயன் நன்கு விளங்கும் :—

1. வீடுகளில் முக்கியமான ஒவ்வொரு வஸ்துவுக்கும் ஒவ்வொரு இடம் இருத்தல் வேண்டும். அப்படி இருப்பதினால் தேவையான வஸ்துவை நாம் உடனே கண்டெடுப்பதுடன், வீட்டிற்குவரும் பிறருக்கும், அவரால் நமக்கு வீட்டிலுள்ள ஒருவஸ்து தேவையாயின், நாம் ஓரிடத்திலிருந்தே இன்ன இடத்திலிருக்கிறதென்று சொல்லி, அவ்வஸ்துவை அடையலாம்.

2. சிலருடன் உட்கார்ந்து போஜனம் செய்யுங்கால், நாம் சாப்பிட்டானவுடன், அவசரமானவேலை இருந்தால் தவிர, மற்றகாலங்களில், மற்றவர்களை விட்டு எழுந்திருப்பதனால், அவர்களுக்கு சங்கோசம் ஏற்படுவதுடன், நாமும் போகும் அவசரத்தில் நமக்கும் தெரியாமல் எச்சில் அவர்களுடைய இலைகளில் விழும்படியும் நேரிடும். ஆதலின் கூடியவரையில் எல்லோருடன் எழுந்திருப்பதே உத்தமமாகும்.

3. நமக்கு சாதாரணமாக ஒவ்வொருவருடைய உதவியும் ஒரு காலத்தில் தேவையாயிருக்கு மாதலின், பிறரை அலக்ஷியமாய் எண்ணி, கவனிக்காமல் விட்டுவிடுவது நன்றன்று.

4. "ஆனந்தபோதினி" பத்திராதிபர் வருட சந்தா தொகையை மணியார்டர் மூலமாயானால் கமிஷன் உள்பட ரூ. 1—2—0 என்றும், வி. பி. மூலமாயானால் ரூ. 1—5—0 என்றும், புது வருஷ ஆரம்பத்தில் முன்னதாக தொகை அனுப்பவேணு மென்றும், "போதினி" வேண்டாதவர்கள் வேண்டாமென்று தெரிவிக்க வேணுமென்றும் தெரிவித்தும், "என்ன, மூன்றணாதானே" என்று கவனிக்காமல் விடுவதினால், வி. பி. யில் வாங்குவோர்க்கு மூன்றணா அதிகமாவதும் தவிர, "போதினி" வேண்டாமென்று வி. பி. யை மறுப்பதினால், பத்திராதிபருக்கு திருப்பப்படும் வி. பி. யால் நேரிடும் நஷ்டம் எத்தனை அணாக்கள் அதிகமாகு மென்பதும் அறியலாம். இவ்விஷயம் சிறியதாயினும் சற்று கவனிப்பின், இருபாலார்க்கும் நன்மை பயக்கு மன்றோ?

5. சிலர் அவசரமாக கடிதங்கள் எழுதி, அவைகளைத் தபால் பெட்டியில்போட மறந்து, மூன்று நாட்களுக்குப் பின் பதில் வரவில்லையே யென்று தம் நண்பனிடம் கோபம்கொண்டு, பின் ஏதோ ஒருநாள் ஒரு புஸ்தகத்திலோ அல்லது வேறு எந்த இடத்திலோ தாம் எழுதிய கடிதம் (தபாலில் போடாமல் இருக்கப்) பார்த்து, நாம் அநாவசியமாய் பத்திராதிபரை நிந்தித்தோம் என்று வருந்துவதும் சகஜ மன்றோ?

6. தமக்கு வந்தகடிதங்களை ஒருகம்பியிலோ அல்லது வேறெவ்விடத்திலேயோ எடுத்து வைக்காமல், பின் ஏதோ (உதாரணமாக அவற்றை எழுதியவரின் மேல் விலாசம்) பார்க்க விரும்பி கடிதங்களைக் காணுமல் சிலர் தேடி அலைகின்றனர்.

7. பிறரிடத்திலிருந்து புஸ்தகமோ வேறு எந்த வஸ்துவோ வாங்கி, படித்துவிட்டோ அல்லது பார்த்துவிட்டோ கொடுக்கிறேன் என்று சொல்லி, தாம் அப்புஸ்தகத்தைப் படிக்காமலே அல்லது அவ்வஸ்துவைப் பாராமலே இருந்தோ அல்லது வேறு யாருக்காவது கொடுத்தோ, போக்கடித்து விட்டோ, கொடுத்தவர் கேட்கும்போது "நீ எப்பொழுது எனக்கு புஸ்தகம் அல்லது வஸ்துவைக் கொடுத்தாய்?" என்றும் சில சமயங்களில் சிலர் கேட்கின்றனர்.

8. மாணவர்கள் பரீக்ஷையில் சிலசமயங்களில் தாங்கள் படித்த கேள்விகளே கேள்விப்பத்திரத்தில் (Question paper) தற்செயலாய் வந்திருந்தால், அந்த சந்தோஷத்திலும், ஆத்திரத்திலும், விடைஎழுத இரண்டரை மணிநேரம் சகவாகம் கொடுத்திருந்தும், நிதானியாது விடையை ஒரு மணி சாவகாசத்தில் எழுதிவிட்டு, குறைந்த மார்க்கு வாங்குகின்றனர். கேள்விகள் தெரிந்தவையாயினும், விடையும் சரியானவையாயினும் தங்கள் விடைப் பத்திரத்தைப் பார்ப்பவர் (It is not what you write, but how you write) "நீங்கள் விடையெழுதுவது பெரிதல்ல அவ்விடையை எவ்விதம் எழுதுகிறீர்கள்" என்பதுதான் எங்களுக்குத் தேவையென்று சொல்லுவார்களே யென்பதைச் சற்றுங் கவனித்து எழுதுவதில்லை.

9. காலணு பொடிவாங்கி, அதில் ஒரு சிட்டிகை போட்டுக்கொண்டு பின், காலணுவுக்காக ஜேபியைப் பார்க்க சில்லரை யில்லாமல், ரூபாய் கொடுக்க, கடைக்காரன், "என்ன ஐயா, ரூபாய் சில்லரைக்காக, காலணு பொடிவாங்கினீர்போ லிருக்கிறது" என்று சொல்ல, சமயத்திற்குச் சில்லரை அகப்படாமலும் சிலர் கஷ்டப்படுகின்றனர்.

10. 3, 4 சாவிகளிருப்பின் அவைகளை ஒருவளையத்தில் போட்டு, ஜேபியில்போட, சில சமயங்களில் காணுமற் போகின்றன.

11. கிராம வண்டிக்காரர்களும், நகரத்தார்களைப்போல், "இடது பக்கம் ஓட்டு" ("Keep to the left") என்பதைக் கவனித்தால் வண்டிகள் சுலபமாக ஓட்டமுடிவதும் தவிர, அவை ஒன்றுக்கொன்று மோதிக்கொள்ளாமலும் இருக்கக்கூடும்.

12. வண்டிகளில் உட்காருமுன் சக்கரங்களின் கடையாணிகள் சரியாயிருக்கின்றனவா என்பதையும் கவனிக்கவேண்டும்.

13. பிரயாணம் செய்யும் சிலர் வண்டிபுறப்பட இன்னும் வெகுநேரமிருக்கிற தென்றெண்ணி ஸ்டேஷனுக்கு வந்து, அங்கு தாங்கள் ஏறவேண்டியவண்டி புறப்படத் தயாராய் நிற்பதைப் பார்த்து, ஓடிவந்து, டிக்கட் வாங்க முயல்கின்றனர். ஆனல் அதற்குள் வண்டி புறப்பட்டு விடுவதும் உண்டல்லவா?

இவைபோன்ற சிறு விஷயங்கள் இன்னும் அநேகமுண்டு. சின்ன விஷயமாயினும் சற்று கவனித்துச் செய்தால் யாவருக்கும் நன்மையே உண்டாகும்.

# கல்விச்செருக்கு.

A. செல்வய்யா

உற்றுப் பார்க்குமளவில் எவரும் செருக்கடைய ஏது ஒன்றுமில்லை. எதற்காகச் செருக்கடைந்தாலும் தன் சொந்த முயற்சியாலேயே வருந்தி அறிந்த சொற்ப விஷயங்களைத் தவிர மற்றபடி கற்ற வித்தையைப் பற்றிப் பெருமை பாராட்ட நியாயம் சிறிதுமில்லை. வேறொருவன் கற்றறிந்த கல்வியில் ஒருசிறிது நாம் பெற்றுக் கொள்வதனால் செருக்கடையலாமோ? அப்படி கர்வப் படுவது ஒருவனிடத்தில் ஒரு காசு பெற்றுக் கொண்டு அதனால் கர்வப் படுவதை ஒக்கு மன்றோ. தங்களுக்கு எவ்வளவு பிச்சை அதிகமாகக் கிடைத்தாலும் இரப்போன் அகந்தை அடைய நீதியோ. கல்வியறிவு கை வழங்கும் நாணயத்தை ஒத்தது.

ஒருவன் தானே முதலில் வருந்திப் பொன் சம்பாதித்துப் பின் அதைச் செவ்வையாகச் சுத்தி செய்து தானே முத்திரை யிட்டு நாணயமாக்கிக் கொண்டாலும், அல்லது இவ்வாறு ஒருவன் ஏற்படுத்திய பொருளை தன் புத்தி சாமர்த்தியங்களைக்கொண்டு விசேஷமாகச் செய்து நல்ல வழியில் பாடுபட்டுச் சிறிது பொருளைச் சேகரித்தாலும் சிறிது செருக்கடைய நியாய முண்டென் றுரைக்கலாம். இவைகளில் எள்ளளவேனும் செய்யாதிருக்க, வழியிற் செல்வோன் தன் கைப்பொருளை முகத்தில் எறிந்து விட்டுப் போனால் அதைப்பற் றிப் பெருமைபட ஏது உண்டோ? ஒருவன் இவ்வகையாய் பிச்சை எடுத்துக் குபேரனைப் போன்று கோடி ரூபாய் குவித்தாலும் அவன் அற்பமாயினும் தன் உழைப்பினாலேயே சம்பாதித்துக் கொள்பவனுக்குச் சற்றேனும் சமமாகான்.

இத்திருஷ்டாந்தத்தின் படியே சூரியன் பூமியைவிட பெரிதென்று ஒருமனிதன் போதித்தால் அதை அறிந்து கொண்டதற்காக நாம் என்ன எதுவைக்கொண்டு கர்வப்படுகிறது? அப்படியே பலபண்டிதர்கள் தாம் கற்றறிந்த பற்பல விஷயங்களையும் நமக்குக் கற்பித்துக் கொடுத்து தமது கல்விச் பொருட்சுமையை நம் தலைமேல் சுமத்தினாலும் அப்படி வரப் பெற்ற கல்விச் சுமைக்காகத் தானாகட்டும் நாம் பெருமைபாராட்ட நியாயம் என்னே? இக்காலத்தில் நமக்குத் தெரியுமென்று நாம் அகங்காரம் கொள்வதற்குக் காரணமான கல்வி அறிவெல்லாம் இத்தன்மையான கேடுகெட்ட வழியில் வந்தவையேயாம். முன்யாரோ ஒரு வித்துவான் வருந்திப் பாடுபட்டு ஸ்தாபித்திருக்கிற சித்தாந்தங்களை வேறொருவர் நமக்குச் சம்மதமில்லாமலிருக்கப் பலவந்தமாகவும், நல்லது பொல்லாது என்பதைக் கூடத் தெரிந்துகொள்ளத் திறமை யற்றிருந்த நம் சின்னஞ் சிறு பிராயத்தில் அடித்துப் புடைத்து நமக்கு வெறுப்பாகவும் பாடம் செய்வித்திருக்க அவைகளுக்காக நாம் கர்வப் படுவதற்கு என்ன நியாயம்?

ஆ! ஆ! நாம் வருந்தி பொருள் தேடியதற்காக எவ்வளவு கர்வப் படுகிறோம்! உண்மையாய் நோக்குமளவில் நாமே பாடு பட்டுத் தேடிக் கண் டறிந்த கல்விச் செல்வம் ஒன்று தவிர மற்ற வழியால் வரப் பெற்ற எவ் வகைக் கல்வியும் நாம் பெருமை பாராட்டும்படி ஏற்ற அணிகலமாக மாட்டாது.

ஒருவன் பாலைவனத்தில் சிறியதாய்க் குடிசை ஒன்று போட்டு அதிற் குடியிருப்பதற்கு வேண்டிய பாய், படுக்கை, பலகை, பீடம் முதலிய பல உபகரணங்களையும் வருந்திச் செய்துகொள்வானானால் அவன் தனக்குத் தானே சிறு வீடு ஒன்று கட்டிக் கொண்டதற்காகக் களிப்படைவது போல சற்று செருக்கு மடையலாம். வெகுநேர்த்தியாக நிருமித்துச் சகல வித சாமான்களும் ஒன்றுலொன்று குறைவில்லாமல் சேகரிக்கப் பெற்ற திவ்விய மாளிகை யொன்று ஒருவனுக்குத் தன் முயற்சி சிறிது மின்றி அமையுமாயின் அவன் முன்னவனை விடப் பன்மடங்கு அதிகமாகச் சுகங்களை அனுபவிக்க இடமுண்டாயினும் எள்ளளவேனும் அகங்காரம் கொள்வதற்கு ஏதுவில்லை. அம்மாளிகையைக் கட்டினவன் திறமைக்காகவோ இவன் கர்வமடைகிறது? பிறர்தேடிய தந்தக் கட்டிலில் படுப்பவனுக்கு உண்டாகுமானந்தம், தானே தேடிய தாழம் பாயிற் படுப்பவனுக்கு உண்டாகுமானந்தத்தில் பாதியாவது இருக்கு மென்பது பத்தில் ஒருபங்கும் நிச்சய மில்லை.

---

## தாத்தாவின் சிறு கதைகள்

## குழந்தையின் குணாதிசயங்கள்

(490-ம் பக்கத் தொடர்ச்சி)

(லக்ஷ்மீ காந்தன் எழுதியது.)

**காலம்:** இலையுதிர் காலம். **நேரம்:** மாலை.

(மகர்கா என்னும் சுமார் பன்னிரண்டு பிராயமுள்ள சிறுவனும், மர்பட்கா என்னும் எட்டுவயதுள்ள சிறுமியும் தங்கள் வீட்டிற்குள்ளே யிருந்து தெருவுக்கு ஓடிவருகிறார்கள். மர்பட்கா தேம்பித் தேம்பி 'ஐயோ!' வென்று அலறியழுகிறாள். பௌலுஷ்கா என்னும் பத்து வயதுள்ள சிறுவன் ஒருவன் அடுத்தவீட்டின் வாயிலில் நின்று கொண்டிருக்கிறான்.)

**பௌலுஷ்கா:**—இந்தா. நீங்கள் எங்கே போகிறீர்கள்? இராவேலை ஏதேனு மிருக்கிறதோ?

**மகர்கா:**—அவன் மறுபடியும் குடித்துவிட்டு வந்திருக்கிறான்.

**பௌலுஷ்கா:** யார் பிராகோர் மாமாவா?

**மகர்கா:** ஆம்! ஆம்!

**மர்பட்கா:**—அவன் அம்மாவை அடித்துக் கொல்லுகிறான்.

**மகர்கா:**—இன்றிரவு முழுவதும் நான் வீட்டிற்குள் போகவே மாட்டேன்; சென்றால் எனக்கு உதைவிழும். (வாயிற்படியில் உட்கார்ந்து கொண்டு) இராவெல்லாம் நான் இப்படியே உட்கார்ந்திருப்பேன். இதைவிட்டு நகரவே மாட்டேன்.

(மர்பட்கா திரும்பத் தேம்பித் தேம்பி யழுகிறள்.)

பௌலுவ்ஷ்கா :—அழுகையை நிறுத்து ; பயப்படாதே. என்ன செய்கிறது ? அழாதே.

மர்பட்கா :—நான் இராஜாவா யிருந்தால் அவனுக்குச் சாராயம் கொடுக்கிற வனைச் சித்திரவதை செய்யும்படி உத்திரவிட்டு விடுவேன். அது மட்டுமா ? மேலும் சாராயமே விற்கக் கூடாதென்று சட்டம் போட்டு ஆக்ஞை பிறப்பித்து விடுவேன்.

பௌலுவ்ஷ்கா :—நன்ருய்ச் செய்வாயே! இப்பொழுது அந்த அரசர்தானே சாராயம் விற்கிருர். வேறு யாராவது விற்ருல் தனக்கு வருமானம் குறைந்து விடுமென்று அவர் பிறரெவரையும் விற்க விடுகிறதில்லை.

மர்பட்கா :—என் வீணுகப் பொய் பேசுகிருய் ?

பௌலுவ்ஷ்கா :—சரிதான் ! இது பொய்யென்ருு சொல்லுகிருய் ? நீ யாரை வேண்டு மாளுலும் கேட்டுப்பார் ! அகுலிஞவை என் அவர்கள் சிறையி விட்டார்கள் தெரியுமா ? அவன் அவர்களுக்குப் போட்டியாய் வியா பாரம் செய்யக்கூடாது—செய்தால் தங்களுக்கு லாபம் குறைந்து போம் என்றுதான்.

மகர்கா :—உண்மையில் அப்படியா ? இல்லையே.........அவன் ஏதோ சட்ட விரோதமாய் நடந்தானென்றல்லவோ பேசிக்கொண்டார்கள்.

பௌலுவ்ஷ்கா :—அவன் சட்டவிரோதமாய் நடந்து கொண்டதெல்லாம் சாராயம் விற்றதுதான்.

மர்பட்கா : அப்படியாளுல் அவன் சாராயம் விற்றது தவறென்றுதான் நான் சொல்லுவேன். அந்தச் சாராயம் எத்தனையோ குடும்பங்களை அதி பாதாளத்தில் ஆழ்த்தி விட்டது. மாமா குடித்தாலும் சில சமயங் களில் வேடிக்கையாகச் சிரித்துப் பேசிக் கொண்டிருக்கிருன். சில வேளைகளிலோ அடித்துக்கொன்று நிர்த்தூளி செய்து விடுகிருன்.

மகர்கா : (பௌலுவ்ஷ்காவைப் பார்த்து) என்னவோ நீபேசுகிற தெல்லாம் எனக்குப் புதுமையா யிருக்கிறது ; நான் நாளையதினம் இதைப்பற்றி எங்கள் உபாத்தியாயரைக் கேட்கிறேன். அவருக்கு இந்த விஷயம் நன்ருகத் தெரிந்திருக்கும்.

பௌலுவ்ஷ்கா : தங்கமாய்க் கேள்.

(அன்றிரவு ஆழ்ந்து நித்திரைபோன மகர்காவின் தந்தையான பிரா கோர் என்பவர் பொழுது புலர்ந்ததும் மறுபடியும் சாராயக்கடைக் கேகினர். மகர்காவின் தாய் அடுப்பண்டை ரொட்டி சுட்டுக்கொண்டிருந்தாள். மகர்கா கிராமப் பள்ளிக்கூடத்திற்குப் போய்விட்டான். குழந்தைகள் வருவ தைக் கவனித்துக்கொண்டு திண்ணைப்பள்ளிக்கூட உபாத்தியாயர் வாயிற் படியில் உட்கார்ந்திருந்தார்.)

**மகர்கா:** (நேராக உபாத்தியாயரிடஞ் சென்று) ஐயா! நமது ராஜாவே சாராயம் விற்கிறா ரென்றும், அதனுற்றான் அகுலினவைச் சிறையி லிட்டார்க ளென்றும் ஒருபயல் என்னிடம் கூறினன். இது உண்மையா?

**உபாத்தியாயர்:** நீஎன்ன மூடத்தனமான கேள்விகளைக் கேட்கிறாய்? உனக்கு யார் அப்படிச் சொன்னது? அரசர் ஒன்றும் விற்பதில்லை. அதுவும் நமது மகாராஜா செய்வதே கிடையாது. அகுலினு இராஜாவின் அனுமதி பெறாமல் சாராயம் விற்றதாலும் அது ராஜாங்கத்தின் வருமானத்திற்கு பாதக முண்டுபண்ணு மாதலாலும் அவன் தண்டிக்கப்பட்டான்.

**மகர்கா:** அதெப்படி வருமானக் குறைவேற்படும்?

**உபாத்தியாயர்:** எப்படி என்றால் இந்த சாராயம் முதலியவற்றிற் கெல்லாம் ஒரு வரி யுண்டு. உற்பத்தி ஸ்தானத்தில் ஒரு பீப்பாய் சாராயம் ஒரு விலைக்கு அடங்குகிறது. அதைக் கடைகளில் கொண்டுபோய் விற்கும் போது பன்மடங்கு லாபத்திற்கு விற்கிறார்கள். இந்த லாபமான தொகையிலிருந்துதான் அரசாங்கத்துக்கு வருமானம். இந்த சாராயம் முதலியவற்றிலிருந்து வரும் வருமானத்தைப் பார்த்தால் கோடிக் கணக்கிற்குமேல் ஓடிவிடுமே.

**மகர்கா:** அவ்வாறானல் எவ்வளவுக் கெவ்வளவு நமது ராஜ்யத்தில் குடிகாரர்கள் அதிகப்படுகிறார்களோ அவ்வளவுக் கவ்வளவு வருமானமும் அதிகரிக்குமல்லவா?

**உபாத்தியாயர்:** அதற்கென்ன தடை! இந்த வருமான மில்லாவிட்டால் இராணுவ மெங்கே. நமதுபள்ளிக்கூடங்க ளெல்லாம் எப்படி நடக்க முடியும்?

**மகர்கா:** இந்த ராணுவம் பள்ளிக்கூடம் முதலியவைகளெல்லாம் அவசியமானல் ஏன் அவ்வந்த வழியில் நேராக வசூல் செய்யக்கூடாது? மாட்டைக் கொன்று செருப்புதானம் செய்வானேன்? அதிருக்கட்டும்—அப்படிக் குடித்தவர்கள் வெறியால் ஓடியாடி வரும்போது அவர்களை ஏன் பிடித்து சிறையிலடைக்க வேண்டும்?

**உபாத்தியாயர்:** ஏனென்றால் அதெல்லாம் சட்டவிஷயம். நீ பெரியவனானல் உனக்கு அதெல்லாம்தெரியும். குழந்தைக ளெல்லாம் வந்து விட்டார்கள். உங்கள் உங்கள் இடத்திற்போ யமருங்கள்; பாடம் ஆரம்பிக்கலாம்.

### நாயகனும் நாயகியும்.

**நாயகன்:**—(மனைவியைப்பார்த்து) நம்முடைய கல்யாணத்தின் போது நாமிருவரும் மணையில் உட்கார்ந்தோமே ஞாபகமிருக்கிறதா?

**நாயகி:**—ஆம்.

**நாயகன்:**—நீ அப்பொழுது மிக்க வணக்க ஒடுக்கமாய் குனிந்த தலை நிமிராமல் இருந்தாயே.

**நாயகி:**—விவாகமான பிறகு எப்படி உங்களை ஆட்டிவைக்கிறது என்பதைப்பற்றித் தலை குனிந்தவண்ணமாய் ஆழ்ந்து ஆலோசித்துக் கொண்டேதான் இருந்தேன்.

# ஆன்றோர் அமுதமொழிகள்

N. A. துரை, B. A.,

1. How sharper than a serpent's tooth it is
To have a thankless child. *Shakespeare.*

நன்றி யற்ற மகவைப் பெற்றிருப்பது ஓர் விஷப் பாம்பின் பற்களைக் காட்டிலும் மிகவும் கூர்மையா யுள்ளதாம். (ஷேக்ஸ்பியர்)

2. He that has light within his own clear breast
May sit i' th' centre and enjoy bright day;
But he that hides a dark soul and foul thought
Benighted walks under the mid-day Sun. *Milton.*

எவன் ஒருவன் தூய உள்ளத்தோடிருக்கிறானோ அவன் நடுநிலைமையில் நின்று பிரகாசம் பொருந்திய நாளை அனுபவிக்கிறான். ஆனால் எவன் ஒருவன் கலங்கலான எண்ணங்களைத் தன் இருளடைந்த உள்ளத்தில் மறைத்து வைத்துக்கொண்டிருக்கிறானோ அவன் பட்டப் பகலிலேயும் திகைப்புடன் நடக்கிறான். (மில்டன்.)

3. So dear to heaven is saintly chastity,
That, when a soul is found sincerely so,
A thousand liveried angels lackey her. *Milton.*

தெய்வத் தன்மையுள்ள கற்பு சொர்க்கலோகத்திற்கே அபூர்வமாம். அத்தன்மையுள்ள ஆத்மா ஒன்று அங்கு காணப்படுமோனால் ஆயிரக் கணக்கான தேவ தூதர்கள் அக்கற்புள்ள மாதுக்கு குற்றேவல் செய்வார்கள். (மில்டன்.)

4. Yet I argue not
Against Heaven's hand or will, nor bate a jot
Of heart or hope; but still bear up and steer
Right onward. *Milton.*

நான் கடவுளின் ஏற்பாடுகளைப் பற்றியும் அல்லது செய்கைகளைப் பற்றியும் ஒன்றும் வாக்குவாதம் செய்யமாட்டேன்; மற்றும் மனதினின்று தோன்றும் எண்ணங்களினின்று ஒரு இமையும் பிறழமாட்டேன், எவ்விதக் கஷ்டங்களையும் பொறுத்துக் கொண்டு நல்வழியையே நாடி நடப்பேன். (மில்டன்)

5. Dear beauteous death; the Jewel of the Just.
*Henry Vaughan.*

நியாயமுள்ளவர்களுக்கு ஆபரணம் நன் மரணமே.

(ஹென்ரிவாஹான்.)




## கிருஷ்ணஸிங் அல்லது துப்பறியும் சீடன்.

(614-ம் பக்கத் தொடர்ச்சி)

**ஆரணி-குப்புசாமி முதலியார்.**

குள்ளன் மௌனமாகவே அவைகளைப் படித்துவிட்டுக் கடைசியில் "பேஷ்-பலேகேர்த்தி-இப்போதுதான் முழு சூழ்ச்சியும் எனக்குத் தெரிகிறது. அப்படியானால் இராஜவேலை யென்ன செய்யப் போகிறாய்?" என்றான்.

கிட்டு :—ஏன் நான் மிக்க தயவாய் நடந்து கொள்வதாக நடிப்பேன்.

மறுகிமிடம் கிட்டுவும் முனியனும் தங்கள் சட்டைகளை யெடுத்து மாட்டிக்கொண்டு சாதாரண விஷயங்களைப் பேசிக்கொண்டே வீட்டைவிட்டுப் புறப்பட்டார்கள்.

இப்போது குள்ளன் மட்டுமே அறையிலிருக்கிறான். ஆனந்தஸிங் இனித் தான் புறப்பட முயன்றான். குள்ளன் அந்த அறையை விட்டு வெளிப்படும்வரைக் காத்திருந்து அவன் சென்றதே ஆனந்தஸிங் கள்ளவழியாய்ப் புறப்பட்டு வீதியில்வந்து சேர்ந்தான். அவன் யார் கண்களுக்கும் புலப்படாமல் வெளி வந்தது தெய்வச் செயலே என்றா கூறலாம். ஆனந்தஸிங் "அப்பா இதைவிட்டு வெளிவந்தது ஒரு கண்டத்திலிருந்து தப்பியதேயாகும்" என்று தனக்குத்தானே கூறிக்கொண்டான்.

ஆனந்தஸிங் அங்கிருந்து நேராய் இராஜவேலிருக்கும் இடத்திற்குச் சென்றான். அவன் அப்போதிருந்த மாறு வேடத்தில் இராஜவேல் அவனை யறிந்துகொள்ளக்கூடவில்லை. அதை யுணர்ந்த ஆனந்தஸிங், "ஏதோ முன்னே கைகுலுக்கிக்கொள்வோம்" என்று அவன் கரத்தைப்பிடித்து தான் முன்கூறியிருந்தபடி கையால் சமிக்கை காட்டினான்.

இராஜவேல் மிக்க வியப்படைந்து "ஆகாகா! நீயா?" யென்றான்.

ஆனந்தஸிங, "ஆம் நான்தான். இப்போது துரிதமாய் நான் சொல்கிறபடியே செய். உனக்கு மிக்க சந்தோஷமும கொஞ்சம் துயரமுமான செய்தி கூறுகிறேன். சாம்பல் நிறமுடைய பழைய கம்பளிச் சட்டையொன்று உன்னிடமிருக்கிறதா?" என்றான். இராஜவேல இருக்கிறது என்றான்.

ஆனந்தஸிங் தன் எதிரிலேயே ஒரு நொடிக்குள் ஒரு நாகரீக மற்ற முரட்டு மனிதன்போல் உருமாறியதைக்கண்ட இராஜவேல் பிரமித்து விட்டான்.

ஆனந்தஸிங் துரிதமாய் அவனை நோக்கி "இனி ஒரு அடி அப்புறம் செல்லு; முன் ஒரு கேள்விக்குமட்டும் உண்மையான விடை கூறு. அதாவது நீ யென்னைப் பூரணமாய் நம்புகிறாயா?" என்றான்.

இராஜவேல் :— "எனக்குப் பூரணமாய் காரணம் தெரியாவிட்டாலும் நான் உன்னைப் பூரணமாய் நம்புகின்றேன் என்பது சத்தியம்" என்றான்.

ஆனந்:—நல்லதாயிற்று. உனக்கு நான் கூறும் சந்தோஷ சமாசாரமாவது—நாளைகாலை ரஞ்ஜன்மணியை நீ காண்பாய் என்பதே.

இராஜ:—அய்யா நீர் மட்டும்...

ஆனந்:—அதிருக்கட்டும். அப்புறம் எனக்கு வந்தன மளிப்பாய். இப்போது நடக்கவேண்டியதைக் கவனி. நீ யவளைக்காணலாம்; பேசலாம். ஆனல் இப்போது அவள் வீட்டிற்குச் செல்ல லாகாது. அவள் அகப்பட்ட சங்கதி அவள் தாய்தந்தையருக்கேனும் வேறுயாருக்கேனும் தெரியலு மாகாது. இது மட்டும் நான் உனக்குக்கூறுகிறேன். உலகநாதம் பிள்ளையின் குடும்பத்தில் ஏதோ ஒரு பெரிய மர்மம் இருக்கிறது. அதைக்கண்டறிந்த பிறகே மனோன்மணி வீட்டிற்குச் செல்லவேண்டும். மனோன்மணியைக் கொஞ்சகாலம் மறைத்து வைத்திருக்கக்கூடிய சூக்ஷ்ம அறிவுடைய சுற்றத்தார் யாராவது உனக்கு இருக்கின்றார்களா?

இராஜ:—பெரிய பாளையத்தில் என்னுடைய அத்தை யொருத்தியிருக்கிறாள். அவள் வைத்துக்கொண்டிருப்பாள்.

ஆனந்:—உலகநாதம் பிள்ளை முதலியவர்கள் அவளை யறிவார்களோ?

இராஜ:—நான் கூறக் கேட்டிருக்கிறார்களே யன்றி அவர்கள் அவளைக் கண்டதில்லை.

ஆனந்:—நல்ல தாயிற்று. நீ யுன்உடைகளில் நல்லவைகளை யெல்லாம் எடுத்துக்கொண்டு இப்போதே புறப்பட்டுபோய் உன் அத்தை வீட்டில் வைத்துவிட்டு "இன்னும் ஒரு பெரிய மர்மம் கண்டுபிடிக்கப்படவேண்டியிருப்பதால் அதுவரையில் மனோன்மணி வீட்டிற்குச் செல்லாமல் மறைந்திருக்க வேண்டு"மென்ற விஷயத்தைக் கூறி, அதோடு நாளையதினம் நீ அவமானத்தோடு உன் உத்தியோகத்தி லிருந்து நீக்கப்படுவாய் என்றும் ஆனல் நீ நிரபராதி யென்றும், அது சீக்கிரத்தில் ருசு செய்யப்படுமென்றும் கூறு

இராஜ:—நான் பொய் ஏன் கூறவேண்டும்?

ஆனந்:—"நான் கூறுவது பொய்யல்ல. நீ ஏதோ ஒரு குற்றம் சாட்டப்படுவாய். அது இன்னதென்று பெரும்பாலும் நீ மனோன்மணியைக் களவாடியதில் சம்பந்தப் பட்டதாய்க் குற்றம் சாட்டப் படவும் கூடும். இந்தக் கடிதங்களை நீ யதற்கு உடந்தையா யிருந்தாயென்று ருசுப்படுத்தும்." என்றான்.

இதைக் கேட்ட இராஜவேலின் முகம் வெளுத்து விட்டது. அவன் ஆனந்த லிங்கை நோக்கி,

"நான் எப்படி இத்தனை விரோதிகளைச் செய்து கொண்டேன்? என்றான்.

ஆனந்த லிங்:—நீ அவர்கள் விஷயங்களுக்கு இடையூறாயிருக்கிறாய் அவ்வளவே அவர்களுக்குப் போதுமானது.

இராஜ வேல்:—"ஏன் நான் அக்கடிதங்களை யழித்து விட்டால்?"

ஆனந்த:—அப்படிச் செய்யவேண்டாம். நான்சொல்லுகிறபடி நட. அவர்கள் அவ்வித எண்ணமில்லாவிட்டால் அவைகளை யெழுதி யிருக்க மாட்டார்கள். அவைகளால் நீ சிறைச்சாலைக்குச் செல்வதாயினும் அவைகள் இருக்கட்டும்: ஆனல் அப்படி நேரிடாது. என்வார்த்தைகளை நம்பு. இப்போது உன்னைச் செய்யும்படி நான் கேட்பதெல்லாம் மனோன்மணியின் நன்மைக்காகவும், இக்கள்ளருடைய இரகசியங்கள் யாவையும் கண்டுபிடிக்க வேண்டியதற்குமே. (தொடரும்)

# மதிப்புரை.

மாப்பிள்ளை மருமகளாதல் என்னு மொரு நூல் வரப்பெற்றோம். இதன் ஆசிரியர் கதாரத்ன சே. கிருஷ்ண சாமி சர்மா. இது சரித்திர சம்பந்த மாகிய நூல். நம்நாட்டில் வடமொழி தழைத்திருந்த காலத்தில் அக்கலை வித்வத் சிரோன்மணிகளாயோங்கிய தத்தன், முதலிய எழுவர் சரிதங்கள் இதன் கண் வருணிக்கப்பட்டிருக் கின்றன. வாச்சியாயன காம சூத்திர மென்னும் கொக்கோகத்திற்கு இவ் வெழுவரே விரியுரை எழுதியவராவர். ஆசிரியர் இவர்கள் சரிதையை விநோ தமாக வரைந்துள்ளார். இவர்கள் காசிமா நகரத்தைத் தம் மாணவப் பருவத்தே விடுத்து திக்கிற்கொருவ ராய்ப் புறப்பட்டு வனம், வனாந்திரம், மலைகள் முதலிய பிரதேசங்களில் சஞ்சாரம் செய்யுங்கால் இவர்களுக் குண்டாகும் அனுபவங்கள் விநோத மானவை. மற்றுமிதில் தத்தன், யக்ஷன், போஜன், ருக்மிணி, அறு பத்திநான்கு கலைவினம், கோணி கா புத்திரன், ஜாரை, கோடமன், ஹேமலதை, ரதிசேனை, மதனசேனை, மோகினி, சிந்தாமணி, நாரயண யோகி, மாதங்கன் இன்னு மிது போன்ற தலைப்பெயருடன் பல ருசி கரமான கதைகள் நிறைந்திருக்கின் றன. தத்தன் யக்ஷசாபத்தால் பெண் ரூபம் பெறுவதும், சிந்தாமணி (வேசியமாது) போதனையால் அந் தண குமாரனான லீலாசுகன் நல்வழி பட்டு பக்த சிரோமணியாய் கிரு ஷ்ண கர்ணாம்ருதம் பாடுவதும், மோகினி தன் சூழ்ச்சியால் வேசிய குமாரத்திகளாகிய ரதிசேனை மதன சேனைவிற்கு ஆபத்தை விளைவிப்ப தும், கோணிகா புத்திரன் அவர் களைக் காப்பதும், மாதங்கனென் னும் பறையனுக்குப் புதல்வனாக ஸ்ரீ நாராயண யோகியை சிந்தாமணி பிறக்கச் செய்வதும், அச்சிறுவன் இரவு நகரத்தைக் காக்குங்கால் வேதாந்த சுலோகங்கள் பாடுவதும் படிப்போர் மனதைப் பரவசப்படுத் தும். நல்ல கற்பனாசக்தி வாய்ந்து சௌந்தரிய உணர்ச்சி நிரம்பியுள்ள இதனைத் தமிழ்மக்களனைவரும் படித் துக் களிப்பாராக. இதுபோன்ற ஆரிய சரித்திரங்களை வெளியிடுமாறு தமிழ் மக்கள் உதவிபுரிவாராக ! விலை ரூ. 1.

கிடைக்குமிடம் :—

"விநோதகதா மண்டலி"

பாரத்வாஜ நிலயம்,

கிருஷ்ணாபுரம்—கோடம்பாக்கம்,

செங்கற்பட்டு ஜில்லா.

## தீயில் எந்த தீ சுடாது?

'குடி' என்றால் எல்லாம் குடிதான். குடியால் கெட்ட குடி கள் கோடிக்கணக்கில்தான் அடங்கும். குடியே விபசாரம், கொலை களவு பொய் சூது ஆகிய தடியர்களைப் பெற்று வளர்க் கிறது. ஆகையால், ஏழை மக்களுக்கு 'குடிக்கவேண்டாம்' என்று பிரசாரம் செய்கிறவர்கள் முதலில் கௌரவமாக உயர்ந்த குடிகளையோ காபி முதலிய ரோகத்தை வளர்க்கும் குடிகளையோ தாமே ஒழிக்க ஏற்படவேண்டும். வெள்ளிப் பாத்திரத்தில் சாப் பிட்டாலும் அது குடிதான். சந்துகளிலே இருக்கும் சாராயக் கடைகளில் குடிப்பதுமட்டுமே குடியாகிவிடாது. குடி தீக்கொப் பானதென்றால் ஷை விபசார முதலியவை தீயனவாகாவோ?



# வர்த்தமானப்பகுதி

**400-வருஷ 'டேன்னிஸ் கோர்ட்' :—**

'டென்னிஸ்' பந்தாட்டம் மிகப் பழமையான ஒரு விளையாட்டாம். சீன தேசத்தினர் பல நூற்றாண்டுகளுக்கு முன்பிருந்தே இவ்வாட்டத்தைப் பயின்று வந்தனராம். பிரிட்டனிலும் இது மிக அதிகமாகப்போய் விட்டதாம்; அதனால் அவ்வாட்டத்தை ஒழிக்கச் சட்டங்கள்கூட அமைக்கவேண்டி நேர்ந்ததாம்.

ஹேம்ப்டன் கோர்ட் அரண்மனையில் உள்ள 'டென்னிஸ்' கோர்ட் ஏற்பட்டு 400-வருஷங்களாய் விட்டனவாம். இந்த நான்கு நூற்றாண்டுகளிலும் இடைவிடாது இவ்வாட்டம் அங்கு ஆடப்பட்டு வந்துள்ளதாம்.

எட்டாவது ஹென்றி அரசரும், ஷேக்ஸ்பியருங் கூட இவ்விடம் 'டென்னிஸ்' ஆடினார்கள் எனக் கூறுகின்றனர்.

**நாற்பது நிமிஷக்கல்யாணம்:—**

லெனின்க்ரேட் என்னுமிடத்தில் உள்ள தொழிலாளிக ளிருவர் வெகு சீக்கிரத்தில் கல்யாணஞ் செய்து கொண்டனராம். அவர்கள் கல்யாணத்திற்கு 40 - நிமிஷங்கள்தாமாயினவாம். அக்கல்யாணம் பொது உடமைக் கட்சிக் கல்யாணம்.

கல்யாணமான 40 - நிமிஷத்திற்குள் விவாகரத்தும் செய்து கொண்டனராம். ஏனெனில் அவளுக்குப் புருஷனுடைய அறையின் சுவர்கள் வலியுற்றதாகையால் அங்கிருக்க அவள் பிரியப்படவில்லையாம். அவனுக்கு அவள் வீட்டில் அவள் தாயிருப்பதால் இருக்கச் சரிப்படவில்லையாம்.

**குப்பைத் தொட்டி அரசர்:—**

எம். வெர்டியர்-ட்யூபோர் அவர்களின் அரசாங்கம் மிக அதிசயமானது. அவர் எந்த நாட்டிற்கும் அரசரல்லர். அவர் ஓர் பெருத்த வியாபாரி. இப்பிரஞ்சுக்காரர் மிக்க ஊக்கத்தோடு குப்பைத் தொட்டிக் கூளங்களை அடிப்படையாகக் கொண்ட ஓர் பெருந் தொழிற்சாலையின் சொந்தக்காரர் ஆவார்.

இத்தொழில் ஆரம்பமாகு மிடம் சாக்கடை. அதனின்றும் பல வீட்டுக்காரர்களால் உபயோக மற்றவையென்று ஒதுக்கப்பட்டுள்ள குப்பைக் கூளங்களை இவரது ஆட்கள் சேர்த்து வருவார்கள்.

இவைகளெல்லாம் தொழிற் சாலையில் அதனதன் தகுதிக்கேற்பத் தனித்தனியாகப் பல தொட்டிகளில் சேமித்து வைக்கப்பெறும். இவருடைய குப்பைகள் எல்லா வியாபாரிகளாலும் நன்கு மதிக்கப்பெறுகின்றன. இவர் குப்பைகளை உடனே யந்திரத்திலிட்டு வேண்டிய சாமான்களை உடனே செய்துகொள்ள முடியும்.

**அமெரிக்காவே!**

1928-ம் வருஷத்தில் உலகத்தில் பற்பல பாகங்களிற் செய்யப்பெற்ற மோட்டார்களின் எண்ணிக்கை விவரங்கள் அமெரிக்கா 38,26,613, இங்கிலாந்து 2,32,000, பிரான்சு 2,00,000 ஜர்மனி 1,50,000, இத்தாலி 47,000, ஆஸ்ட்ரியா 11,500, ஸ்விட்ஜர்லாந்து 1,600, இவ்விஷயத்திலும் மற்ற உற்பத்திகளைப் போன்று அமெரிக்காவே முன்னணியில் நிற்கிறது.

# “ஆனந்தபோதினி” பஞ்சாங்கம்.

**சுக்கில௵ ஆடி௴—கலியுகாதி 5031, சாலிவாகனம் 1852,**
**பசலி 1339—கோல்லமாண்டு 1104—ஹிஜரி 1348,**
**இங்கிலீஷ் 1929௵ ஜூலை௴—ஆகஸ்டு௴**

| ஆடி௴ | ஜூலை௴ | வாரம். | திதி. | நக்ஷத்திரம் | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 16 | செவ் | தச17-50 | விசா31-45 | ம31-45சி | ஆடிப்பண்டிகை |
| 2 | 17 | புத | ஏகா23-20 | அனு33-58 | சித்60 | சர்வ, மத்வ, ஏகாதசி |
| 3 | 18 | வியா | து29-30 | கே46-35 | பி46-35சி | கோபத்ம விரதாரம்பம் |
| 4 | 19 | வெ | திர35-40 | மூல55-3 | அ55-3பிர | பிரதோஷம், பும்சவனம் |
| 5 | 20 | சனி | சது41-45 | மூல60 | சித்60 | திருதினஸ்பிருக் |
| 6 | 21 | ஞா | ○47-20 | பூரா1-33 | சித்1-33அ | ○ பௌர்ணமி |
| 7 | 22 | திங் | பிர52-10 | உத்8-25 | மர8-25அ | ஆஷாடபகுளம் |
| 8 | 23 | செவ் | துதி56-23 | திரு14-40 | சித்60 | சாதுர்மாஸ்ய துதியா |
| 9 | 24 | புத | திரி59-43 | அவி20-5 | பிர20-5சி | வியாதியஸ்தர் மருந்துண் |
| 10 | 25 | வியா | சது60 | சத24-45 | ம24-45சி | கரிநாள் [ண |
| 11 | 26 | வெ | சது2-8 | பூர28-25 | சித்60 | ஏற்றம் ஸ்தாபிக்க |
| 12 | 27 | சனி | பஞ்3-28 | உத்30-53 | சி30-53ம | கிருஷிபாரம்பம் செய்ய |
| 13 | 28 | ஞா | சஷ்3-28 | ரேவ32-8 | அமி32-8சி | காதுகுத்த,வித்தியாரம்பம் |
| 14 | 29 | திங் | சப்2-10<br>அஷ்59 25 | அஸ்31-58 | சித்60 | அவமாகம், வியாதியஸ்தர் மருந்துண்ண |
| 15 | 30 | செவ் | நவ55-13 | பர30-18 | சித்60 | வியாதியஸ்தர் குளிக்க |
| 16 | 31 | புத | தச49-28 | கி✕27-10 | அ27-10சி | கிருத்திகை, மாடுகொள்ள |
| 17 | 1 | வியா | ஏகா42-35 | ரோ22-40 | மர60 | சர்வ, மத்வ ஏகாதசி |
| 18 | 2 | வெ | து34-40 | மிரு17-3 | சித்60 | காவேரி பெருக்கு |
| 19 | 3 | சனி | திர25-58 | திரு10-33 | சித்60 | அவமாகம்,மாசசிவராத்திரி |
| 20 | 4 | ஞா | ச●16-55 | புன3-40<br>பூச56-43 | சித்60 | சர்வத்திர அமாவாசை, கரிநாள், 9-க்குள் மழை |
| 21 | 5 | திங் | அமா8-0<br>பிர59-48 | ஆயி50-18 | சி50-18ம | சோமவார அமாவாசை; அரசபிரதக்ஷணம். அவமாகம் |
| 22 | ஆகஸ்டு௴ 6 | செவ் | துதி52-25 | மக44-40 | சித்60 | |
| 23 | 7 | புத | திரி46-28 | பூர40-33 | அமி60 | |
| 24 | 8 | வியா | சது42-15 | உத்38-8 | ம38-8சித் | |
| 25 | 9 | வெ | பஞ்40-8 | அஸ்37-43 | அ37-43சி | |
| 26 | 10 | சனி | சஷ்40-8 | சித்39-23 | ம39-23அ | |
| 27 | 11 | ஞா | சப்42-13 | சுவா43-13 | சி43-13மர | |
| 28 | 12 | திங் | அஷ்46-5 | விசா48-38 | மர48-38சி | |
| 29 | 13 | செவ் | நவ51-15 | அனு55-13 | சி55-13மர | |
| 30 | 14 | புத | தச57-18 | கேட்60 | சித்60 | |
| 31 | 15 | வியா | ஏகா60 | கேட்2-45 | பி2-45சித் | |

| | ராகு | குரு சுக் | புத |
|---|---|---|---|
| — | 9-கட-புதன்<br>14-மிது-சுக்<br>23-சிம்ம-புத<br>26-கன்-செவ் | | சூரி<br>—<br>செ |
| சனி | | கே | |

**PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR,**
**AT THE "ANANDA BODHINI" POWER PRESS,**
**LAWYER CHINNATHAMBI MUDALI ST., MADRAS.**